உ

ஸ்ரீ மஹா கணபதி துணை

# அம்பாளும் திருமூலரும்

உரை ஆசிரியர்

**அபிராமி தாஸன்**

**மீனாட்சி சுந்தரம் மோகன்**

யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்

# குரு வணக்கம்



**குருவே சீவனை சிவனாக்குபவன்**
**கருடன் உருவம் கருதும் அளவில்**
**பருவிடம் தீர்ந்து பயம் கெடுமா போல்**
**குருவின் உருவம் குறித்த அப்போதே**
**திரிமலம் தீர்ந்து சிவன் அவனாமே -**

திருமந்திரம் 2659

கருடனாகிய பருந்தை நினைத்துக் கருட மந்திரத்தை உச்சரித்த அளவிலேயே, பாம்பு கடித்த கொடிய விடம் தீர்ந்து, பாம்பு கடிக்கப்பட்டவன், பயம் மறைந்தோடுவதைப்போல், ஞான குருவின் திருஉருவை மனத்தால் நினைத்த உடனேயே (சீடன் எங்கிருந்தாலும் சரி) சீடனின் மனதைப் பிடித்த மும்மலங்களும், கழிந்தோடச் ''சீவன் சிவனாகும்'' தன்மை பெறுவான். (சிவன்-சக்தி-அபேதம்)

# ஆசிரியர் உரை

குருவருள் இல்லையேல் திருவருள் இல்லை.

''ஸ்ரீகுரு: ஸர்வ காரண பூதா - சக்தி:'' (பாவனோபநிஷத்து)

ஸ்ரீ குருவே அனைத்திற்கும் காரணமாக விளங்கும் சக்தி.

ஸ்ரீவித்யா பரம்பரா குருமண்டலத்திற்கு இந்த நூலை சமர்ப்பிகிறேன்.

அம்பாளின் அருளினால் அடியேன் அடைந்தது இருமாதாக்கள். இதில் மூத்தவர் அடியேனுக்கு தாய்ப்பால் ஊட்டி வளர்த்த ஸ்ரீமதி கமலம்மாள். சிறந்த ஸ்ரீவித்யா உபாசகர். தீவிர சாக்த பக்தை.

இளையவர் அடியேனுக்கு ஞானப்பால் அருளிய குருமாதா ஸ்ரீஸ்ரீஸ்ரீ ப்ரகாஸாம்பா. சுமார் பதினைந்து வருடங்களுக்கு முன் என் சித்தத்தில் திருமூலரின் திருமந்திரத்தை வித்திட்டவர். திருமூலரின் மீது அபார பக்தி கொண்டவர். இந்த நூலின் முதல் பாடல் ''அவளை அறியா அமரரும் இல்லை''- குருமாதா அடியேனுக்கு சொல்லிக் கொடுத்த முதல் திருமந்திரப் பாடல். இன்று நூலைக் கண்டு களிக்க அவர் இல்லை. ஆனால் அவர் ஸுக்ஷ்மமாக என்னுள் இருப்பதை அடியேன் உணருகிறேன்.

50 வருடங்களாக எங்கள் குடும்பத்திற்கே குருவாக இருந்து நல்வழிகாட்டி வருகிறார் ஸ்ரீஸ்ரீஸ்ரீ K.H. கிருஷ்ணன் ஸார் அவர்கள். பீஷ்மரைப் போன்று ஒரு சிறந்த ப்ரம்மச்சாரி. அடியேன் இன்று இந்நிலையில் உள்ளேன் என்றால் அவர்தான் காரணம்.

இந்நூலுக்கு அணிந்துரை அருளிய சாக்த ஸ்ரீஸ்ரீஸ்ரீ ப்ரத்யங்கிரா ஸ்வாமிகள் அவர்களுக்கு முதற்கண் அடியேன் ஆயிரம் கோடி நமஸ்காரம். ஸ்வாமிஜி எளிமைக்கும், இனிமைக்கும், தன்னடக்கத்திற்கும் இலக்கணமாக வாழ்ந்து

கொண்டிருக்கும் உன்னத, உதாரண புருஷர். ஸ்வாமிஜி என்ற பந்தாவோ, படாடோபமோ துளிக்கூட பார்க்கமுடியாது.

எவ்வளவோ அலுவல்களுக்கு இடையிலும் இந்நூலை எழுத்து விடாது படித்து உற்சாகத்துடன் அணிந்துரை அருளியதை என் வாழ்வின் பெரும்பாக்யமாக கருதுகிறேன்.

ஸ்வாமிஜி சொல்லும் பாடம்: ''எல்லாம் அவள் செயல்''

அடியேனின் உற்றார், உறவினர், நண்பர்கள் இந்நூலை எழுத ஆரம்பித்தவுடனேயே, தாங்களாகவே முன் வந்து செய்த உதவிக்கு நன்றி சொல்ல வார்த்தைகள் இல்லை.

சிரமம் பாராது, சிரத்தையுடன் கும்பகோணத்திலிருந்து, திருவாவடுதுறை திருக்கோயிலுக்குச் சென்று, அம்மை, அப்பனை தரிசித்து, தல வரலாறு, திருக்கோயில் படங்கள், திருமூலர் ஜீவசமாதி குறிப்புகளை சேகரித்து உடனே சென்னையிலிருக்கும் அடியேனுக்கு கொரியர் மூலமாக அனுப்பிய திரு. ⊠⊠⊠⊠ சந்திரசேகரன் (ராஜா வேதகாவ்ய பாடசாலை, கும்பகோணம்) செய்த உதவி மகத்தானது. (இதை இவர் தொண்டு என்கிறார்! என்னே! இவர் பெருந்தன்மை!)

இந்நூலுக்கு ஒளி அச்சு வடிவமைப்பு செய்த திரு. பாலசுப்ரமணியன் (அபிராமி மைந்தன்) அச்சிட்டு வழங்கிய ஜெய் கணேஷ் பிரிண்டர்ஸ் திரு. ரவி இருவருமே மிகுந்த உற்சாகத்துடன் ஒத்துழைப்பு கொடுத்ததை அடியேனால் மறக்க முடியாது.

குற்றம் குறைகளை சான்றோர்கள் மன்னித்தருள வேண்டும். இந்நூல் ''அம்பாளை'' அடைய நற்கதி. ஆனால் அது அடியேன் பாக்யம். வாழ்க! ஸ்ரீ மாதா!

**- அபிராமிதாஸன்**

(மீனாட்சி சுந்தரம் மோகன்)

## காப்பு

## ஐங்கரன் - ஞானக் கொழுந்து



**ஐந்து கரத்தனை யானை முகத்தனை**
**இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை**
**நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினைப்**
**புந்தியில் வைத்து அடி போற்றுகின் றேனே.**

ஐந்து கைகள், யானை முகம் வெண்ணிலாவின் மூன்றாம் பிறைக்கோடு (இந்து-வெண்ணிலா, இளம் பிறை - மூன்றாம் பிறைச்சந்திரன்) போன்ற ஒற்றைக் கொம்புடையவன் பரம்பொருளின் திருமகள், அறிவின் உச்சியாக இருப்பவனை - விநாயகப் பெருமானைச் சிந்தையில் வைத்துத் தியானித்து அவன் திருவடி போற்றி வணங்குகின்றேன்.

# அம்பாளும் திருமூலரும்



அனைத்தினிற்கும் அப்பாலாகி இருக்கும் பரம்பொருள் நம்மை இம்மண்ணுலகில் படைத்ததின் நோக்கத்தை நாம் உணரவேண்டும். ''அரிது அரிது மானிடராய் பிறத்தல் அரிது'' என்று ஔவைப் பாட்டி சொல்வதின் உட்பொருளை உணர வேண்டும். எல்லாப் பிறவிகளிலும் மானிடப் பிறவிதான் உயர்ந்தது என்று அனைவரும் அறிவோம். இந்தப் பிறவியின் பயன்- - மீண்டும் மண்ணுலகில் ''பிறவாதிருக்கும் வழியைத்'' தேடுவதே! அதாவது முக்தியடைய இடையறாது முயற்சி செய்ய வேண்டும். அந்த முயற்சிக்கு ஊன்று கோலாயிருப்பவள் தான் ''சக்தி'' என்று அழுத்தந் திருத்தமாக அறைகிறார் திருமூலர்! அவள் அகிலத்திற்கும் அன்னை! தாயில்லாமல் சேயில்லை சேயில்லாமல் தாயில்லை'' அவள்தான் அனைவரும் அழிவில்லாத ஆனந்தமாகிய முக்தியை அடைய வழி காட்டுபவள்.

## 1. வழிகாட்டியாய் விளங்கும் விமலை

**அவளை அறியா அமரரும் இல்லை**
**அவளன்றிச் செய்யும் அருந்தவம் இல்லை**
**அவளன்றி ஐவரால் ஆவதொன்றில்லை**
**அவளன்றி ஊர் புகுமாறு அறியேனே.**

திருமந்திரம் 1053

அன்னை சக்தியை அறிந்து உணராத தேவர்கள் யாரும் இல்லை. அன்னை சக்திதான் தவத்தின் மையமாகவும், மெய்ப்பொருளாகவும் திகழ்பவள் அந்த சக்தி இல்லாமல் செய்யக்கூடிய தவங்களும் இல்லை, அவள் உதவியின்றி படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில் புரியும், பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், மகேஸ்வரன் சதாசிவன் என்னும் ஈசர்களும் அதைச் செய்யும் ஆற்றல் அற்றவராவர்கள். அவள் துணை இல்லாமல் முக்தி (ஊர் - மோட்சம்) பெறும் வழியை (ஆறு) அடியேன் அறியேன்.

இந்திரனுக்கு அன்னை சக்திதான் பிரம்மோபதேசம் செய்தாள் என்று கேனோபநிஷத் கூறுகிறது. இதைக் கண்டு கொண்டேன் என்றதால் ''இந்திரன்'' எனப்பெயர் ஏற்பட்டதாய் சுருதி சொல்கிறது.

(இத - மதர்ச - மித - மதர்சமிதி, தஸ்மா-திந்த்ரோ நாமேதி ச்ரூயதே:)

அன்னையை வாக்தேவிகள் 'தேவேசி' என்று கூறுகிறார்கள். அதாவது, எல்லா தேவர்களுக்கும் (பிரம்மா, விஷ்ணு, சிவன் உட்பட) ஈசுவரியானவள்.

எல்லா தேவர்களுக்கும் தலைவியாய் இருப்பதால், ''அவளை அறியா அமரரும் இல்லை'' என்கிறார் திருமூலர். ''அவளன்றிச் செய்யும் அருந்தவம் இல்லை''. அன்னை சக்தியின்

தவத்தில் அனைத்து கடவுளர்களும் அடக்கமாவதினால் வேறொரு தெய்வத்தை நினைக்க வேண்டிய அவசியமில்லை. இந்தக் கருத்தினை ஆதி சங்கரர் ஸௌந்தர்யலஹரீ 25-வது ஸ்லோகத்தில் (த்ரயாணாம் தேவானாம்...) கவிநயத்துடன் விளம்புகிறார். அபிராமிபட்டர் (அபிராமி அந்தாதியில்) ''மாத்தவளே! உன்னையன்றி மற்றோர் தெய்வம் வந்திப்பதே'' என்பார். அதாவது பெருமைக்குரிய சிறந்த தவத்துக்குரியவளே! உன்னையல்லாது இன்னொரு தெய்வத்தை வணங்குவனோ? என்பதே!

அபயாம்பிகை பட்டர் (அபயாம்பிகை சதகத்தில்) அன்னையின் தாமரைத் திருவடிகளை ''தவசரணி'' என்று போற்றிப் புகழ்கிறார். தவத்திற்குரிய திருவடிகளைக் கொண்ட தெய்வம் அன்னை சக்திதான்!

''அவளன்றி ஐவரால் ஆவதொன்றில்லை''.

அன்னை அமர்ந்திருக்கும் ஆஸனம் எவ்வாறு அமைக்கப் பெற்றது என்று பார்ப்போம். பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், ஈசானன் ஆகிய நால்வரும் நான்கு கால்களாகவும், ஸதாசிவன் மேல் பலகையாக இருக்கும் கட்டிலில் காமேசுவரோடு இருக்கிறாள்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாமத்தில் பின்வரும் நாமாக்கள் இக்கருத்தினை பொருட்செறிவுடன் சொல்கிறது.

58 பஞ்ச - ப்ரஹ்மாஸன ஸ்திதாயை: (பிரம்மா - விஷ்ணு-ருத்ரன்- ஈசானன்-ஸதாசிவன் என்ற) பஞ்சப் பிரம்மத்தை ஆஸனமாகக் கொண்டவள்

250. பஞ்சப்ரஹ்ம - ஸ்வரூபிண்யை ; பஞ்சப் பிரம்ம ஸ்வரூபமாயிருப்பவள்.

249. பஞ்சப்ரேதாஸனஸீனா : ஐந்து பிரேதங்களாகிய - ஆஸனத்தில் இருப்பருவள்.

இவ்விரண்டு நாமாக்களின் கருத்து யாதெனில் - பிரம்மா- விஷ்ணு- ருத்ரன்-ஈசன் - ஸதாசிவன் ஐவரும் தத்தம் சக்திகளுடன் கூடினால் பஞ்சப் பிரம்மம் என்றும், சக்திகளினின்று பிரிந்தால் பஞ்ச பிரேதம் (சவம்) என்றும் கூறப்படும். ஆதிசங்கரரும் ஸௌந்தர்யலஹரீயில் மூன்று ஸ்லோகங்களில் (சிவ: சக்த்யாயுக்தோ (1) சிவாகாரே மஞ்சே (8), கதாஸ்தே மஞ்சத்வம்-92) வெகு அருமையாக இக்கருத்தினை விளக்குகிறார்.

அதாவது ''சக்தியின்'' துணை இல்லாவிட்டால் எந்தக் கடவுளும் எதையும் செய்வதற்கு அருகதையற்றவராய் ஆகி விடுவர்.

''அவளன்றி ஊர் புகுமாறு அறியேனே'': ஊர் என்பது முக்தி, வீடு, மோட்சம் என்பதைக் குறிக்கும் (மீண்டும் பிறவா நிலை) ஆறு என்பது 'வழி' அல்லது மார்க்கம் என்று பொருள்படும். அன்னை சக்தி தான் இம்மண்ணுலகில் பிறந்து அனைவருக்கும் முக்தியடைய வழிகாட்டுபவள். இவ்வுலகில் நாம் பிறந்தவுடன் பாலூட்டி சக்தி தருவது நம்மைப் பெற்றெடுத்த தாய் தானே!

அபயாம்பிகை பட்டர் அபயாம்பிகை சதகத்தின் ஒவ்வொரு பாடல் இறுதியிலும், ''மயிலாபுரியில் வளரீசன் வாழ்வே அபயாம்பிகைத்தாயே'' என்று வெகு அருமையாக சொல்கிறார். அதாவது அன்னை சக்தி தான் ஈசனின் உயிர்நாடி என்று. இதுதான் சாக்த சமயத்தின் தத்துவம் ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் ''காமேச்வர ப்ராண நாடீ'' என்று வருவது காண்க.



## உ. அன்னையின் ஆற்றல்

**பராசத்தி மாசத்தி பல்வகையாலுந்**
**தராசத்தி யாய் நின்ற தன்மை யுணரா**
**உராசத்தி ஊழிகள் தோறும் உடனே**
**புராசத்தி புண்ணிய மாகிய போகமே. - (1056)**

அன்னையின் ஆற்றலை யாரால் அறியமுடியும்? அன்னை பராசக்தி எல்லாவிதத்திலும் மிகப் பெரும் ஆற்றலுடைய அருட்சக்தியானவள். அனைத்து அகிலாண்டங்களிலும் வாழும் உயிர்களைத் தாங்கும் ஆதார சக்தியாக இருப்பவரும் அவளே என்பதை உணரவேண்டும். யுகங்கள் மாறினாலும் அன்னை எங்கும் பரவி நின்று அருள் பாலிக்கும் பராசக்தியும் ஆனவள். உயிர்களுக்குப் புண்ணிய பலனைத் தந்தருளும் பேரின்ப வாழ்வும் அவளே. (‘தராசக்தி = தாங்கும் சக்தி. உராசக்தி = பொருந்தும் சக்தி. பராசக்தி = அருளும் சக்தி).

அன்னையின் தகைமைகளை ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் வெகு அருமையாக அழகாக எடுத்துரைக்கிறது.

572. பரா சக்தி- எல்லாவற்றிற்கும் மேலான சிறந்த உயர்வான சக்தி

199. ஸர்வஸக்திமயீ ---- --எல்லா சக்திகளையும் உடையவள்.

ஸ்ரீலலிதா ஹைஸ்ரநாமம் சொல்லும் முதல் திருநாமா - ஸ்ரீமாதா - சிறப்புமிக்க அன்னை. கஷ்டம் வரும்போது நம்மையும் அறியாமல் முதலில் வாயிலிருந்து, தானே வெளிவரும் சொல் ‘‘அம்மா’’. இது அனைவரும் அறிந்ததொன்று.

823. ஜனனீ - தாயார் சகல ஜகத்தையும் சிருஷ்டிப்பவள். தகப்பனால் தன் சரீரத்தில் சேர்க்கப்பட்ட சுக்லத்திற்கு கருவாக உருக்கொடுப்பவள்.

457. மாதா - கருவை தன்னுள் அடக்கி வைத்து

காப்பாற்றுபவள். தஞ்சாவூர் அருகேவுள்ள திருக்கருக்காவூரில் அன்னை. ஸ்ரீ கர்ப்பரட்சாம்பிகையாக இருந்து கர்ப்பிணித் தாய்மார்களை -காப்பது குறிப்பிடத்தக்கது.

826 ப்ரஸவித்ரீ - தக்க தருணத்தில், தேவையான அளவுக்கு கரு வளர்ந்த பிறகு அதை வெளியில் கொண்டு வருபவள்.

337. விதாத்ரீ - சிசுவை போஷித்து வளர்ப்பவள்

935. ஜகத்தாத்ரீ - உலகத்தை தாங்குபவள்

985. அம்பா - ஆபத்து வேளையில் சேயை நோக்கி பறந்து வரும் (அழைக்காமலேயே) தாயானவள்.

295. அம்பிகா - சிறந்த தாயாக இருப்பவள் (நித்திரையும், ஓய்வும் தருபவள்.. )

934 விஸ்வமாதா - உலகங்களுக்கெல்லாம் அன்னை.

ஸ்ரீலலிதா சஹஸ்ரநாமம் பூர்ணமாவது

1000. லலிதாம்பிகா - லலிதா என்ற பெயரை உடையதான தாயானவள் அல்லது லலிதமான அழகிய தாய்.

''லலிதம்'' என்ற சொல்லுக்கு பொருள் சொல்வது கடினம். மனதிற்கு சந்தோஷத்தை கொடுக்கும் எல்லா பாவங்களும் ''லலிதம்'' என்று சொல்லலாம். எதிலும் ஆனந்தம் எப்போதும் ஆனந்தம் எங்கேயும் ஆனந்தம் - இதுதானே ''முக்தி என்பது. சுருக்கமாகச் சொன்னால் - முக்தியைத் தரும் தாயாக விளங்குகிறாள் ஸ்ரீ லலிதாம்பிகைத்தாய்.

அபிராமிபட்டர் (அபிராமி அந்தாதியில்) ''உழைக்கும் பொழுது உன்னையே அன்னையே என்பன் ஓடிவந்தே'' என்பார்.

''இவ்வுலகில் சில குழந்தைகளைப் பெற்ற தாயை தெய்வமாக நினைக்க முடியுமானால், அகிலத்தையும் பெற்ற அம்பிகையை தாயாக வணங்குவது எளிதல்லவா!'' என்று காஞ்சி பெரியவர் கூறுவார்.

அனைத்தையும் அறிந்து உணர்ந்த திருமூலர் அன்னை சக்தி தான் முக்தியைத் தரவல்லவள் என்று சொல்வதின் பொருள் - இப்பொழுது தெளிவாகிறதன்றோ?.'

## 3. உயிர்களுக்கு ஊன்றுகோல்

**கொம்பனை யாளை குவிமுலை மங்கையை**
**வம்பவிழ் கோதையை வானவர் நாடியைச்**
**செம் பவளத் திருமேனிச் சிறுமியை**
**நம்பி என் உள்ளே நயந்து வைத்தேனே.**

திருமந்திரம் 1058

அன்னை சக்தியை இப்பாடலில் திருமூலர் ஒரு அழகு ததும்பும் சிறுமியாக வர்ணிக்கிறார். இந்தச் சிறுமியைத்தான் ஸ்ரீவித்யா உபாஸனையில் ‘பாலையாக’ வணங்குகிறார்கள் சாக்த அன்பர்கள்.

அனைத்துயிர்களுக்கும் கொழுகொம்பு போன்றவளை, குவிந்த மார்புடையவளை தேன் சிந்தும் மலர்கள் நிறைந்த மாலையணிந்தவளை தேவர்கள் தேடி அடையும் திரிபுரையை, செம்பவழம் போன்ற சிவந்த அழகிய திருமேனி உடைய இளம் பெண்ணை இம்மைக்கும் மறுமைக்கும் இவளே துணை என்று நம்பி என் உள்ளதுள்ளே விரும்பி இடம் கொள்ளச் செய்தேன். (வம்பு-தேன். கோதை - மாலை, நயந்து-விரும்பி)

திருமூலர் ‘‘நயந்து வைத்தேனே’’ என்று சொல்லும் நயம் போற்றுதற்குரியது. அதாவது, நயந்து என்பது நாமாக ஒரு பொருளை நாடிச் சென்று அதன் மீது விருப்பம் கொள்வது என்பதாகும். திருமூலர் சக்தி மீது வைத்துள்ள அபார நம்பிக்கையையும் அனன்ய பக்தியையும் உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளக்குகிறது இப்பாடல்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாமம் 891. வித்ருமாபா- பவழம் போன்ற காந்தி உள்ளவள் 965.பாலா - பாலாத்ரிபுராஸுந்தரியாக குமாரியாக இருப்பவள். சிறுமி போல் லீலையில் (விளையாட்டில்) ஆசைப்படுவதால் அம்பிகைக்கு ‘பாலா’ என்று பெயர், என்று த்ரிபுரஸித்தாந்தம் கூறுகிறது. மேலும் ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாமத்திலேயே,

74. பண்ட புத்ர- வதோத் யுக்த - பாலா-விக்ரம - நந்திதா - அன்னை தனது குழந்தையான பாலாதேவி பண்டபுத்திரர்களை அழிப்பதில் காட்டிய பராக்கிரமத்தை கண்டு மகிழ்ந்தவள். (பண்டபுத்திரர்கள்-ஆணவம் முதலிய மலங்களைக் குறிக்கும்)

பாலா-பாலாம்பிகை, பாலை, வாலாம்பிகை என்ற திருநாமங்கள் அன்னையை எப்போதும் ஒன்பது வயசுப் பெண்ணாய் வர்ணிக்கின்றன. சித்தர்கள், ‘பாலா தேவியை’-வாலை என்பார்கள். ‘வாலையடி சித்தருக்கு தெய்வம்’. தெய்வம் என்பது வழிவழியாய் வந்த மொழி. சித்தர்கள் வாலையைத்தான் வழிபடும் தெய்வமாகக் கொண்டிருந்தனர்.

அபிராமிபட்டரும்-அபிராமி அந்தாதியின் முதல் பாடலிலேயே அன்னை அபிராமியை ‘என்றன்’ விழுத்துணையே என்று துதிக்கிறார். அவரும் இப்பாடலில் அன்னையின் திருமேனியை சிவந்த வண்ணமாக வர்ணிக்கிறார்.

மயிலாடுதுறை திருக்கோயிலில் வீற்றிருக்கும் மாயூர நாதரின் உடனாய அபயாம்பிகைத் தாயை வாலாம்பிகையாக சில பாடல்களில் (அபயாம்பிகை சதகம்) வர்ணிக்கிறார் அபயாம்பிகை பட்டர்.

எல்லா சாக்த நூல்களும் அன்னையின் திருமேனியை ஒருமிக்க கருத்துடன் சிவந்த நிறமாக வர்ணிக்கின்றன. இதன் காரணம் - சிவப்பு நிறம் கருணையைக் குறிக்கும். அன்னை சக்தி கருணையின் கடல் அல்லவா! ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாமம் 326, கருணா ரஸ ஸாகரா என்று அன்னையைப் புகழ்கிறது. ஸ்ரீலலிதா த்ரிசதீ -153. காருண்ய-விக்ரஹா- கருணையே உருவெடுத்தவள்.

மனிதன் எந்தக் காரியம் செய்தாலும் அதில் முழு நம்பிக்கை வேண்டும். அப்போதுதான் அதன் லட்சியம் நிறைவேறும். திருமூலர் ‘அன்னை சக்தியை நம்பினேன். அதனால் முக்தி அடைந்தேன்’ என்பது இப்பாடலின் கருத்தாய் நிற்கிறது.

# 4. விதியை வெல்ல வேண்டுமா! சக்தியை நாடுங்கள்

**அதுவிது வென்று அவமே கழியாதே**
**மதுவிரி பூங்குழல் மங்கை நல்லாளைப்**
**பதிஅது மேவிப் பணிய வல்லார்க்கு**
**விதிவழி தன்னையும் வென்றிட லாமே.**

திருமந்திரம் 1231

'அந்த வழிச் செல்வதா? இந்த வழிச் செல்வதா? எந்த வழிச் செல்வது' என்று தெரியாமல் வாழ்நாளை வீண் நாளாக்கி காலத்தை வீணே கழிக்காதீர். தேன் சிந்தும் மலர் சூடிய கருங் கூந்தலுடைய அன்னை சக்தியை சந்திர மண்டலத்தில் புருவ நடுவில், (ஆக்ஞையில்) பொருந்தி வழிபட வல்லவர்க்கு விதியையும் - வெல்லும் வல்லமை உண்டாகும்.

(அவமே -வீணாக-மது-தேன் பதி அது - சந்திரமண்டலம், புருவ நடு)

இம் மனித வாழ்வில் அனைவரும் அடிக்கடி ''எல்லாம் விதியின் செயல் நம் கையில் ஒன்றுமில்லை'' என்று அலுத்துக் கொள்கிறோம். ஆனால் அந்த விதியின் செயலை எவ்வாறு தடுத்து நிறுத்தவேண்டும் என்று சிந்திப்பதே இல்லை. விதியை வென்றிட வழியுண்டா? என்று ஆராய்ந்து அறிய வேண்டும். அப்போது தான் நமக்கு மெய்ப்பொருள் புலப்படும். இதைத்தான் இப்பாடலில் திருமூலர் அழுத்தந்திருத்தமாகச் சொல்லுகிறார். விதியை வெல்வதற்கு வழி - அன்னை சக்தியிடம் சரண் அடைய வேண்டும்.

அன்னை சக்தியை புருவ நடுவிலே ஆக்ஞையில் வைத்து அல்லும் பகலும் துதிப்போர்கள் நிச்சயமாக விதியை வென்றிடலாம் என்பது தான் இப்பாடலின் கருத்து. ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாமம் - 593 பாலஸ்தா - நெற்றியில் இருப்பவள், அங்கு உள்ள ஆக்ஞா சக்கரத்தில், ''ஹ்ரீம் பீஜத்தில் உள்ள பிந்து ரூபமாக இருப்பவள். 'ஹ்ரீம்' என்பது அன்னை சக்தியின் மூல மந்திரம்.

## 5. சக்தியே முக்திக்கு நாயகி!

**சக்தி என்பாள் ஒரு சாதகப் பெண் பிள்ளை,**
**முக்திக்கும் நாயகி என்பதை அறிகிலர்,**
**பத்தியை பாழில் உகுத்த அப்பாவிகள்**
**கத்திய நாய் போற் கதறுகின்றாரே**

- திருமந்திரம் 1199

சக்தி என்று போற்றப்படும் சதாசிவப்பெண் விரும்பித் தொழும் அடியவர்களுக்கு அருள் செய்யும் அன்பு உள்ளம் கொண்டவள். முத்தியின்பம் தரவல்ல முதல்வி அவளே என்பதை பலரும் அறிவதில்லை. இந்த உண்மை அறியாது பக்தி செய்யும் மனத்தைப் பாழடைய அப்பாவி மனிதர்கள் தெரு நாய் போல் வீணே குரைத்துக் கொண்டிருக்கிறார்களே!

இப்பாடலில் திருமூலரின் வருத்தத்தையும், கோபத்தையும் காண்கிறோம். நம் மனிதர்களுக்கு சக்திதான் முத்தியை அளிப்பவள் என்று தெரியவில்லையே என்று ஏங்குகிறார். பின் அது கோபமாக மாறி, அம் மனிதர்கள் நாய் போன்றவர் என்று ஏசுகிறார். இது சக்தி மீது திருமூலர் கொண்ட அனன்ய பக்தியைக் காட்டுகிறது. அவளின்றி அணுவும் அசையாது என்பதில் உறுதி கொண்டவர் திருமூலர்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் 114. பவாரண்யகுடாரிகா - ஸம்ஸாரமாகிய காட்டை சிதைக்க உதவும் கோடரி, அதாவது மீண்டும், மீண்டும் பிறப்பதைத் தடுத்து பிறவாநிலை தருபவள் அன்னை சக்தி

737 முக்தி ரூபிணீ - முக்தியையே ரூபமாக உடையவள்

736 முக்திதா - முக்தி அளிப்பவள்

838. முகுந்தா - முக்தி அளிப்பவள்

839. முக்தி நிலயா - முக்தியின் இருப்பிடம். அபிராமி பட்டர் அபிராமி அந்தாதியில்(29) ‘‘தவமுயல்வார் முத்தியும் முத்திக்கு வித்தும்...’’ என்று அன்னையைப் போற்றி புகழ்வது காண்க.

## 6. ஆசை அறுக்கின் விதியை வெல்லலாம்!

**அதுஇது என்னும் அவாவினை நீக்கித்
துதியது செய்து சுழியுற நோக்கில்
விதியது தன்னையும் வென்றிட லாகும்
மதி மலராள்சொன்ன மண்டல மூன்றே. 1186**

அது வேண்டும். இது வேண்டும் என்று கண்டதைப் பெற விரும்புகிற மனத்து ஆசைகளை விட்டொழித்து விட்டுப் பராசக்தியைப் போற்றி புகழ்ந்து பணிந்து உள்ளத்து உள்ளேயும் வெளியேயும் மனம் ஒன்றித் தியானத்தில் இருத்தி நினைத்திருந்தால் விதியையும் வெல்லும் வல்லமை பெறலாம். மனமாகிய செந்தாமரையில் வீற்றிருக்கின்ற மதிமண்டல நாயகி குறித்துச் சொன்ன மண்டலங்கள் மூன்றே ஆகும். அவை சந்திர, சூரிய, அக்னி மண்டலங்கள் (அவா-ஆசை, சுழியுற-பிரம்மரந்திரத்தில் பொருத்தி, மதி - சிந்தை, சந்திரனுமாம்)

''ஆசைக்கோர் அளவில்லை'' என்பார் தாயுமானவர். ஆசைப்பட்ட பொருள் கிடைத்துவிட்டாலும் அதனோடு நிறைவு பெறுவது மனத்தின் இயல்பு அன்று. அனுபவிக்க அனுபவிக்க மேலும் மேலும் மனம் அதையே விரும்பித் தாவுகிறது. அளவற்ற பொருள்களுக்குக் கரையில்லாத கடலை உவமை கூறுவது மரபு. ஆகவே ஆசையும் கடல் போன்றது. அபிராமி பட்டரும் ''ஆசைக் கடலில் அகப்பட்டு'' என்பார். (அபிராமி அந்தாதி 32).

திருவள்ளுவர்,
''அவா என்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்
தவா அப்பிறப்பீனும் வித்து'' என்கிறார்.

(திருக்குறள் - 361)

இக்குறளின் கருத்து, ஆசையே பிறப்பிற்கும் இறப்பிற்கும் காரணம். மேற்சொன்ன காரணங்களை மனதிற் கொண்டு, - திருமூலர்,'' அது இது என்னும் அவாவினை நீக்கி'' என்று வெகு அருமையாகச் சொல்கிறார்.

## 7. அன்பர்களின் மனத்தாமரையில் இருப்பவள்!

**புரிந்தருள் செய்கின்ற போகமா சத்தி**
**இருந்தருள் செய்கின்ற இன்பம் அறியார்**
**பொருந்தி யிருந்த புதல்வி பூவண்ணத்து**
**இருந்த இலக்கில் இனிதிருந் தாளே. 1184**

உயிர்களுக்கு உயிர்வாழ்க்கை என்றும் இன்ப நுகர்வினை எய்திடச் செய்யும் இச்சா சக்தியாகிய அன்னை, உயிர்களின் உணர்வில் பொருந்தி, அவர்களுக்கு இன்ப வாழ்வு அருளுகின்றாள். இந்த உண்மையைப் பலர் அறிந்திருக்கவில்லை. இப்படி உயிர்களோடு பொருந்தியிருக்கின்ற பெருமாட்டி - செந்தாமரைப் பூ நிறம் கொண்ட திருமேனியள். அவள் இருப்பது அன்பர்களின் மனத்தாமரையினிலே (இலக்கு-இருக்குமிடம்)

அன்னை சக்தி படைப்பதோடு நின்றுவிடாமல் எல்லா உயிர்களின் உள்ளத்திலேயும் 'அந்தர்யாமியாக' இருந்துகொண்டு சுகத்தைத் தருபவள். அபிராமி பட்டர்,அபிராமி அந்தாதியில், ''பூத்தவளே! புவனம் பதினான்கையும் பூத்த வண்ணம் காத்தவளே'' (13), ''வருந்தாவகை என் மனத்தாமரையினில் வந்து புகுந்து இருந்தாள். (90) என்பார்.

அன்னை அனைவரின் மனதிலேயும் இருப்பதால் மனதை தூய்மையாக வைத்துக் கொள்ளவேண்டியது அவசியம். எனவே, ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்று மலங்களையும் தவிர்த்து அன்னையின் திருவடிகளை எப்போதும் தியானிக்கவேண்டும். உள்ளேயிருக்கும் கடவுளை வெளியில் தேடித்திரிய வேண்டியதில்லை. இதைத்தான் திருமூலர் பல பாடல்களில் வலியுறுத்துகிறார்.

## 8. ஐவரையும் பெற்றவள் அன்னை சக்தி!

**ஓங்காரி என்பாள் அவளொரு பெண்பிள்ளை**
**நீங்காத பச்சை நிறத்தை யுடையவள்**
**ஆங்காரி ஆகியே ஐவரைப் பெற்றிட்டு**
**ரீங்காரத்துள்ளே இனிது இருந்தாளே. 1073**

ஓங்கார சொரூபியாகிய பராசக்தி பெண்ணில் பெருந்தகை. மாறாத பச்சை நிறமேனியள். ஆங்கார சொரூபியான இவள் அயன் அரி, அரன், ஆண்டான் அருளோன் என்னும் ஐவரை உண்டாக்கி அவர்கள் மூலம் ஐந்தொழிலும் நிகழ்த்துபவள். இவள் ரீங்கார ஒலி எழுப்பும் இரீம் (ஹ்ரீம்) என்றும் மந்திர எழுத்துள் இருந்து மகிழ்பவளாம். (ஆங்காரம்-எழுச்சி, ரீம் - ஹ்ரீம் - சக்தியின் மூலமந்திரம், பீஜம்)

அன்னை தேன் சிந்தும் மலர்களை தனது கரிய கூந்தலில் அணிந்திருப்பதற்கு காரணம் அம்மலர்களைச் சுற்றி எப்போதும் வண்டுகள் ரீங்காரம் செய்யவே.

வண்டுகளே இவ்வாறு ரீங்காரம் செய்து அன்னை சக்தியை துதிக்கும்போது மனிதர்களாகிய நாம் ‘ஹ்ரீம்’ மந்திரத்தை தவறாது செபித்து அன்னையின் திருவடிகளை அடைய வேண்டாமா? ஆறு அறிவு படைத்த நாம் இந்த சந்தர்ப்பதை நழுவ விடக்கூடாது.

அபிராமி பட்டர், ‘‘முதல் மூவருக்கும் அன்னே’’ என்பார். அன்னையே அனைத்திற்கும் ‘ஆதிமூலம் அன்றோ! அவளின்றி அணுவும் அசையாது!



## 9. யோகத்தினால் காணலாம் அன்னயை

**உணர்ந்திலர் ஈசனை ஊழிசெய் சத்தி**
**புணர்ந்தது பூரணம் புண்ணியர் தங்கள்**
**கணங்களைத் தன்னருள் செய்கின்ற கன்னி**
**கொணர்ந்த வழிகொண்டு கும்பகமாமே. 1126**

தோற்றத்துக்கும் ஒடுக்கத்துக்கும் காரணமாக இருக்கும் சக்தியே, ஈசனைத் தோற்றுவிக்கவும் ஒடுங்கச் செய்யவும் வல்லவள். இதை உலக மக்கள் அறிவதில்லை. இதை உணர்ந்த புண்ணியப் பயன் உடைய அடியார் திருக்கூட்டத்தைக் காத்தருள் புரிகின்ற இளம் பெண்ணாகிய சத்தி, புண்ணிய பொருள் அடைய உயிர்களுக்கு காட்டி அருளிய வழி அவளருளைச் சிந்தித்து தியானித்தலே. (கும்பகம்-மூச்சடக்கி இருத்தல்)

இப்பாடலில் திருமூலர் யோக நெறியினால் அன்னையை அடையும் வழியைக் கூறுகிறார். சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு நிலைகளையும் கடந்த முனிவர்- தவத் திருமூலர்.

இங்கு மூச்சை அடக்கும் முறையைச் சொல்லுகிறார். இதைத்தான் பிராணாயாமம் என்பர். பிராணாயாமம் - ப்ராணன்+ஆயாமம் ப்ராணன் - உயிர்மூச்சு. ஆயாமம் -அடக்குதல். பிராணனைக் கட்டுப்படுத்துதல் என்று பொருள்படும். பிராணன் வசப்பட்டால் மனமும் வசப்படும்.

பூரகம் - மூச்சுக்காற்றை உள்ளுக்கு இழுப்பது. கும்பகம் - அவ்வாறு இழுத்த மூச்சுக்காற்றை நிறுத்திவைத்தல், இரேசகம் - அவ்வாறு அடக்கிய காற்றினை வெளியே விடுதல்

மூச்சுக்காற்றை உள்ளே இழுத்து அதை அடக்கி அன்னையை தியானம் செய்வருக்கு அவள் தரிசனம் தந்து அருள் புரிவாள். இது யோக மார்க்கமாகும். தொடர்ந்து நீண்ட நாள் பயிற்சி தேவை.

## 10. திருமூலர் இவ்வுலகிற்கு வந்த காரணம்

**மாலாங்கனே இங்கு யான் வந்த காரணம்**
**நீலாங்க மேனியன் நேரிழையாள் ஒடு**
**மூலாங்க மாக மொழிந்த திருக் கூத்தின்**
**சீலாங்க வேதத்தைச் செப்ப வந்தேனே --77**

-மாலாங்கனே நான் இந்தப் பூவுலகில் வந்திருந்த காரணம் - என்ன தெரியுமா எனக் கேட்டுத் திருமூலர் கூறுகிறார்.

நான் இவ்வுலகுக்கு வந்த காரணம், நீலவண்ண நேரிழையாள் சக்தியுடன் உலகத் தோற்றத்திற்கு மூல காரணமாம் ஆனந்த நடனத்தின் அரும் பொருளாய் வந்த ஞான வேதத்தைச் சொல்வதற்குத்தான்.

(நீலாங்கம் - நீல நிறம். நேரிழை-அழகிய ஆபரணம் மூலாங்க-மூல அங்கம்-உலகத் தோற்றத்தின் மூலம் - சீலாங்க - சீல அங்கம் - ஒழுக்கத்தையே உவப்பாகக் கொண்ட)

மாலங்கன், இந்திரன், சோமன், பிரமன், உருத்திரன், காலாங்கி, கஞ்சமலையன் என்ற எழுவரும் திருவாவடுதுறையில் திருமூலருடன் இருந்த தவமுனிகள் என்பர்.

தமிழில் நான் வேதத்தை சொல்ல வந்தவன் என்று வெளிப்படையாகக் கூறுகிறார் திருமூலர். மற்றொரு பாடலிலும், - ‘‘வேதத்தின் ஓதத்தகும் அறம் எல்லாம் உள’’ (51) - என்றும் சொல்வார். அதாவது வேதத்தில் எல்லா அறங்களும் உள்ளன. வேதத்தில் இல்லாதது எங்கும் இல்லை. வேதத்தைத் தவறாது ஓத வேண்டும். அவ்வாறு ஓதி வீடு பேற்றை (முக்தியை) பெறுக.



## 11. திருமூலர் பலகோடி ஆண்டுகள் வாழ்ந்தார்

**இருந்த அக்காரணம் கேள் இந்திரனே**
**பொருந்திய செல்வப் புவனா பதியாம்**
**அருந்தவச் செல்வியைச் சேவித்து அடியேன்**
**பரிந்துடன் வந்தனன் பத்தி யினாலே --75**

பல கோடி ஆண்டுகள் பாருலகில் நான் வாழ்ந்திருந்த காரணம் இந்திரனே! கேட்பாயாக. எல்லாவகைச் செல்வங்களும் நிறையப் பெற்ற பூவுலகங்கெல்லாம் தலைவியாம் உலகநாயகி, தவப் பெருந்தேவி - உமை அம்மையைச் சேவித்து, அத்தாயை மிக விருப்பத்துடன் பக்தி செய்து வழிபட்டு வந்ததன் பயனாலேயாம்.

(புவனம் - பூவுலகம், பதி - தலைவி, சேவித்து - பணிந்து பரிவு - விருப்பம் - பக்தி வழிபாடு)

'இந்திரனே' என்று இங்கு திருமூலர் குறிப்பிட்டது அவருடைய சீடராகும்.

அன்னை சக்திதான் அனைத்து உலகங்களுக்கும் தலைவியானவள் என்பதை இப்பாடலில் ஊர்ஜிதப்படுத்துகிறார் திருமூலர். தான் நிறைய ஆண்டுகள் வாழ்ந்ததின் காரணம் அன்னை மீது அனன்ய பக்தி கொண்டு வழிபட்டதன் பயனே என்று கூறுகிறார்.



## 12. அன்னையின் திருவடியில் திருமூலர்

**நேரிழை ஆவாள் நிரதிச ஆனந்தப்
பேருடையாள் என் பிறப்பறுத்து ஆண்டவள்
சீருடையாள் சிவன் ஆவடு தண் துறை
சீருடையாள் பதம் சேர்ந்து இருந்தேனே. --78**

அழகிய அணிமணிகள் சூடியவள். ஆனந்தப் பேருடையாள். எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவள். சத்திய சொரூபமானவள். என் பிறவித்துயர் துடைத்தாண்டு கொண்ட பெருமாட்டி. சிறந்தவள். திருஆவடு தண்துறைச் சிவபிரான் உடன் உறையும் உமை அம்மையே அவள். அவளின் திருவடி ஒன்றி 'நான் தியானித்திருந்தேன்.

(நிரல்)- எங்கும் நிறைந்த நிச - சத்தியமான - சீர் - சிறப்பு)

திருமூலர் ஒரு சாக்த அன்பர் என்பது அவர் ''அன்னையின் திருவடியில் ஒன்றி தியானித்திருந்தேன்'' என்று சொல்வதிலிருந்து தெள்ளத் தெளிவாக விளங்குகிறதல்லவா! அன்னையின் அருளாளர்கள் அனைவரும், ஆபரணங்கள் அணிந்து விளங்கும் மங்கையாக அன்னையை வர்ணிக்கிறார்கள். 'ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் - 51. ஸர்வாபரண பூஷிதா- எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப் பெற்றவள். அபிராமிபட்டரும் 'அபிராமி அந்தாதி - 37) ''கைக்கே அணிவது கன்னலும் பூவும்...'' என்ற பாடலில் அன்னை அணியும் ஆபரணங்களை வர்ணிக்கிறார். அபயாம்பிகை பட்டர் அபயாம்பிகை சதகத்தின் முதற்பாடலிலேயே அன்னையை பாதாதி கேசமாக பலவிதமான ஆபரணங்களால் அலங்கரிக்கிறார். இது தாயின் மீது சேய் கொண்ட தெய்வீக அன்பை வெளிப்படுத்துகிறது.



## 13. நல்வழிகாட்டும் நாயகி

**உறங்கும் அளவின் மனோன்மணி வந்து**
**கறங்கு வளைக்கைக் கழுத்தார புல்லிப்**
**பிறங்கொளித் தம்பலம் வாயில் உமிழ்ந்திட்டு**
**உறங்கல்ஐயாஎன்று உபாயம் செய்தாளே. 1107**

சிந்தையில் பொருந்திய சிவசக்தியை மறந்து, நான் சற்றே கண்ணயர்ந்தபோது, கைவளையல்கள் ஒலி செய்ய, அன்னை மனோன்மணி வந்து என் கழுத்தைக் கட்டிக் கொண்டு, ஒளி விளங்கும் அவள் அருள் சக்தியை என்னுள் பெய்து, ‘‘ஐயா! நீ உறங்கக் கூடாது!’’ என்று அருள் செய்து எனக்கு நல்வழி காட்டினாள். (கறங்கு-ஒலி செய்யும், புல்லி-தழுவி, பிறங்கு ஒளி - மிகுந்த ஒளி உடைய, தம்பலம்-தம்பயன், திருவருள்)

திருமூலர் சக்தியை தாயாகப் பாவித்து தன்னை ஒரு சேயாகக் காண்கின்றார். இதுதானே பக்தியின் உன்னத உச்சி நிலை. இவ்வாறு தாய்-சேய் பாவத்தில் தான் இருந்தனர், அபிராமி பட்டரும், அபயாம்பிகை பட்டரும்.

ஒரு நல்ல தாய், தன் சேய் பாதையிலிருந்து தவறும்போது, அச்சேயைத் தட்டி மீண்டும் அப்பாதைக்கு கொண்டு வருவாள் என்பதை இப்பாடல் மூலம் வெகு நேர்த்தியாக திருமூலர் உலகத்திற்கு உணர்த்துகிறார். மனோன்மணி சக்தி என்பது மனதை புறவிஷயங்களில் அலையவிடாது உள் முகமாகத் திருப்புதல். அன்னையே நமது மனதை வெளிவிஷயங்களில் செல்லவிடாது அவ்வப்போது நம்மை கண்காணித்து அருள்புரிபவள் என்பதே இப்பாடலின் கருத்தாகும்.



## 14. தனக்குத் தானே தலைவி

**இனிய தென்மூலை இருக்குங் குமரி**
**தனியொரு நாயகி தானே தலைவி**
**தனிப்படு வித்தனள் சார்வு படுத்து**
**நனிப்படு வித்துள்ளம் நாடிநின் றாளே. 1105**

உள்ளத்துள்ளேயும் வெளியேயும் தென்மேல் மூலையில் வீற்றிருக்கும் தேவி, ஒப்புவமை இல்லாத தனிப் பெரும் சிறப்புடையவள், தனக்குத்தானே தலைவியானவள். என்னைப் பற்றியிருந்த அஞ்ஞான மயக்கங்களில் இருந்து, என்னை விடுவித்து தனிமைப் படுத்தி, என் உள்ளம் அவள் திருவடியில் நன்கு பொருந்தி இருக்கச் செய்து, என்னை நாடி வந்து, எனக்கு அருள் செய்தாள்.

(தனிப்படுவித்து - தனிமைப்படுத்தி சார்வு படுத்து-வேறுபடுத்தி - நனிப் படுவித்து - நன்கு பொருந்தச் செய்து)

நாடி நின்றாளே: இதன் பொருள் ஆழ்ந்த கருத்துடைத்து. அன்னை தானாகவே வலிய வந்து தன்னை ஆட்கொண்டாள் என்று திருமூலர் சூட்சமமாக சொல்கிறார்.அபிராமி பட்டரும்அபிராமி அந்தாதியில் (32) ‘‘நின் பாதம் எனும் வாசக்கமலம் தலைமேல் வலியவைத்து ஆண்டு கொண்ட நேசத்தை என் சொல்லுவேன் ஈசர்பாகத்து நேரிழையே’’ என்று கூறுகிறார். சேய் எங்கிருந்தாலும் தேடி வருவது தாயின் இயல்பு! அகிலாண்டத்திற்கும் தாயான ஆதிபராசக்தியைப் பற்றி சொல்லவும் வேண்டுமோ? அவள் தன் சேய்களின் அன்பிற்காக ஏங்குபவள் அல்லவா!



## 15. என் உள்ளத்துள்ளே புகுந்தாள்

**நாடிய கண் மூன்று நடுவெழு ஞானத்துக்**
**கூடி இருந்த குமரி குலக்கன்னி**
**ஆடகச் சீறடிப் பைம்பொற் சிலம்பொலி**
**ஊடக மேவி உறங்குகின் றாளே. 1106**

நாடிகள் மூன்று. - நம் மனித உடலில் மூன்று நாடிகள் முக்கியமாய் உள்ளன. அவை இடைகலை, பிங்கலை, நடு நாடியாகிய சுழுமுனை

‘நடுவெழுஞானம் - புருவ நடுவில் (ஆக்ஞையில்) தோன்றும் மெய்யுணர்வு. கூடியிருந்த குமரி - குலக்கன்னி - பொருந்தத் தோன்றியிருந்த மாறா இளமையும் அழகும் உடைய சக்தி.

அவள் மிக உயர்ந்த பொன்னாலான சிலம்பணிந்த திருவடி உடையவள். அவள் அச்சிலம்பொலியோடு, என் உள்ளத்துள்ளே புகுந்து அங்கேயே தங்கி இருந்து ஆனந்த அமைதியைத் தந்தருளுகிறாள் (ஆடகம் - பொன்னின் மாற்றுயர்ந்த வகை. ஊடகம்- அகத்தூடு -உள்ளத்துள்ளே)

திருமூலர் சென்ற பாடலில் என்னை நாடி வந்தாள் என்று சொன்னார். இங்கு அடுத்த கட்டமாக என் உள்ளத்தில் புகுந்தாள் என்று சொல்வது மிகவும் அருமை. அதாவது அப்பாலுக்கும் அப்பால் இருக்கும் பரம்பொருள் பக்தனின் பக்திக்கு ஏற்ப படிப்படியாக கீழே இறங்கி வருகிறது. ஆன்மா கடவுளைத் தேடுவது சகஜம் - ஆனால் அந்தக் கடவுள் ஆன்மாவை நாடி வருவது உன்னத நிலையை குறிக்கிறது. இது தான் முக்திக்கு முன் நிலை.



## 16. அஞ்சேல் என்று அருளினாள்

**உபாயம் அளிக்கும் ஒருத்தியென் உள்ளத்து**
**அபாயம் அறக்கெடுத்து அன்பு விளைத்துச்**
**சுவாவை விளக்குஞ் சுழியாகத் துள்ளே**
**அவாவை அடக்கிவைத்து அஞ்சல்என் றாளே. 1108**

பிறவித்துயர் கெடப் பேரின்ப நிலை அடையும் வழி அருளும் ஒருத்தியாகிய அன்னை ஆதிபராசக்தி, காமம், குரோதம் முதலான பகைவர்களால் வரும் ஆபத்தைப் போக்கி, என்னுள்ளம் 'அன்புமயமாக, நாய்போல் அலைந்து திரிகின்ற மனத்தை சுழுமுனையின் உள்ளே நிலைத்திருக்கச் செய்து, ஆசைகளை 'விட்டொழிக்கச் செய்து, கவலைப்படாதே என்று காத்தருள் செய்தாள் (உபாயம் - வழி. அறக்கெடுத்து - அடியோடுநீக்கி, சுவா - நாய்- சுழியகம் - புருவநடு, ஆக்ஞை, அவா - ஆசை)

திருமூலரின் மனத்தினுள் வந்த அன்னை சக்தி அவருடைய மலங்களை முழுமையாக நீக்கி அவரைக் கவலைப்படாதே என்று சொல்லி ஊக்கமும் உற்சாகம் அளித்தாளாம் 'ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் - 357. தாபத்ரயாக்னி ஸந்தப்த ஸமாஹ்லாதன சந்த்ரிகா - மூன்று விதமான தாபங்கள் (ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம்) என்ற அக்னியால் எரிக்கப்படும் ஜீவனை அம்பாள் தன் கருணையாகிற நிலவினால், அவனுடைய தாபங்களை நீக்கி மகிழ்விக்கிறாள்.

மனிதன் மனதிலிருந்து மாசு நீங்க அன்னையே அருள் புரியவேண்டும். அதாவது, **அவள் அருளினால் அவள்தாள் வணங்கி!**



## 17. தஞ்சம் அடைவோர்க்கு அபயம் அளிப்பவள்

**அஞ்சொல் மொழியாள் அருந்தவப் பெண்பிள்ளை**
**செஞ்சொல் மடமொழி சீருடைச் சேயிழை**
**தஞ்சமென் றெண்ணித்தன் சேவடி போற்றுவார்க்கு**
**இஞ் சொல் அளிக்கும் இறைவி என்றாளே. 1109**

அழகிய நமசிவாய என்னும் இனிய சொல்லின் பொருளானவள். அரிய தவத்தை அருளுகின்ற அம்மை உயர்ந்த சொல்லின் செல்வியானவள். அழகிய உடை அலங்காரமும், அணிமணி அலங்காரமும் கொண்டிருப்பாள்.. ''நீயே கதி என்று அவளைத் தேடி வந்து தஞ்சம் அடைவார்க்கு, திருவடி தொழுது பணியவோர்க்கு, அவர்கள் அச்சமும் கவலையும் போக, இனியமொழி கூறி இன்னருள் வழங்கும் இறைவி இவளேயாகும்.

(அம் சொல் - அழகிய சொல். செஞ்சொல்-சிறந்த சொல் இஞ்சொல் - இனிய சொல்). சென்ற பாடல்களில் அன்னை சக்தியுடன் தான் பெற்ற அனுபவத்தை உலகோர் யாவரும் அடைய வேண்டும் என்பதே அவரின் நோக்கம், (நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்) தாயுமானவரும்,

''எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே'' என்பார்

திருவடி சரணம் : எல்லாவற்றிலும் உயர்ந்து நிற்பது அன்னையின் திருவடி சரணம். ஆதிசங்கரர் ஸௌந்தர்ய லஹரியில் இக்கருத்தை காவ்ய ரசனையுடன் கூறுகிறார். அதாவது. அன்னைக்கு அபய, வரத ஹஸ்தங்கள் (முத்திரை) இல்லை. ஏனென்றால் அவள் திருவடிகள் எல்லாவற்றையும் தரவல்லது. அவர் தம் சீடர்களுக்கு அளித்த உபதேசம் ''ஆபதிகிம் கரணீயம்? ஸ்மரணீயம் பாதயுகலம் அம்பாயா'' இதன் பொருள் : ஆபத்து சமயத்தில் என்ன செய்ய வேண்டும்? அன்னையின் திருவடிகளையே தியானிக்க வேண்டும். திருமூலரும் அன்னையின் திருவடிகளில் ஒன்றி தியானத்தில் இருந்ததை முன்னும் பார்த்தோம்.

## 18. பிறவி அறுக்க அன்னையை வணங்குங்கள்

**தையல் நல்லாளைத் தவத்தின் தலைவியை**
**மையலை நோக்கும் மனோன்மணி மங்கையைப்**
**பைய நின் றேத்திப் பணிமின் பணிந்தபின்**
**வெய்ய பவமினி மேவகி லாவே. 1103**

பெண்ணின் பெருந்தகையானவளை, தவயோகத்தின் தலைவியாக இருப்பவளை, ஆன்மாக்களின் அஞ்ஞான மயக்கங்களைக் தனது அருட்பார்வை நோக்கால் போக்கி அருளுபவளை, மனோன்மணியை, மங்கை நல்லாளை, அமைதியாக இருந்து பணிந்து, தொழுது வணங்குங்கள். இப்படி வணங்கினால் கொடிய துன்பப் பிறவி உங்களைத் தீண்டாது. (மையல்- மயக்கம்,பைய நின்று - அமைதியாக நின்று, வெய்ய - கொடிய, பவம் - பிறவி)

அன்னையின் கடைக்கண் பார்வையினால் அனைத்தையும் பெறலாம் என்பது தான் இப்பாடலின் சாராம்சம். அபிராமி பட்டர் ‘அபிராமி அந்தாதியில் (69) ‘‘கனம் தரும் பூங்குழலார்அபிராமி கடைக்கண்களே’’ என்று அன்னையின் அருட்பார்வையை சிறப்பாகச் சொல்லுகிறார். அன்னையின் அருட்பார்வையைப் பற்றி சிலாகிக்காத சாக்த நூல்களே இல்லை.

திருமூலர் அன்னையை அன்புடன் அமைதியாக இருந்து தொழவேண்டும் என்று அரிய கருத்தினை இப்பாடலில் தெரிவிக்கிறார். ‘திரு அருணகிரிநாதரும், கந்தர் அனுபூதியில், ‘‘சும்மா இரு சொல் அற’’ என்று அருமையாகச் சொல்கிறார். அபிராமி பட்டர்அபிராமி அந்தாதியில் (53) ‘‘கருத்தில் வைத்து தன்னந்தனியிருப்பார்க்கிது போலும் தவமில்லையே’’ என்பார்.

அன்னை தவத்தின் தலைவி. அவள் மேல் தவம் செய்ய நினைப்போரின் நிலை எவ்வாறு இருக்கவண்டும் என்பது தெள்ளத் தெரிவாக புரிகிறதல்லவா!

## 19. சக்தியே திருமூலரின் குரு

**பராசத்தி யென்றென்றும் பல்வகை யாலுந்**
**தராசத்தி யான தலைப்பிர மாணி**
**இராசத்தி யாமள ஆகமத் தாளாகும்**
**குராசத்தி கோலம் பலவுணர்ந்தேனே 1169**

பராசக்தி, அன்னை என்று பலவாறு போற்றப்படும் ஆதிசக்தியே எல்லா உலகங்களையும் எங்கும் எப்போதும் தாங்கி நிற்கிற தயாபரியானவள். அவளே உலக முதல்வி. ஓதும் பிரணவப் பொருளானவள். ஒன்பது வேதாகமங்களிலும் விவரிக்கப்பட்டுள்ள மாயா சக்தி (இரா சக்தி) ஆவாள்.

இவளே எனக்கு குருவாக நின்று அருள் செய்த குராசக்தியாகவும் அருளுபளாவாள். (குரு + சக்தி -குராசக்தி) இப்படிப் பல வடிவங்களில் நான் பராசக்தியைக் கண்டுணர்ந்தேன். (தரா சக்தி-தாங்கும் சக்தி. தலைபிரமாணி - முதல்வி தலைவி, பிரணவ சொரூபி. பிரமாணி - பிரமாணம், அடையாளம்-கோலம் - வடிவம்)

குருவருள் இன்றி திருவருள் இல்லை! திருமூலர் அன்னை சக்தியைக் குருவாக அடைந்த பாக்யசாலி. அன்னை சக்தியே தேவர்களின் தலைவனான இந்திரனுக்கு ப்ரம்ம உபதேசம் செய்தாள் என்று பார்த்தோம். ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம். 725. தஷிணாமூர்த்திரூபிணி - தக்ஷிணாமூர்த்தியின் ரூபமாக இருப்பவள். சிவனுடைய ரூபமாக, தட்சிணாமூர்த்தி பிரம்மா, விஷ்ணு இவர்களுக்கு உபதேசம் செய்தவர். இவர் தெற்கு முகமாக அமர்ந்திருப்பதால் இவருக்கு தக்ஷிணாமூர்த்தி என்று பெயர்.

யாமள சாஸ்திரம் என்பது அம்பிகை பற்றிய ஓர் ஆகம நூல். இந்நூலை இயற்றியவர் சிவபெருமான். அன்னையை சிவனே புகழ்ந்து பாடுவதால் அன்னையே எல்லாவற்றிற்கும் முதல்வி என்பதை ஐயமில்லாமல் உணர்கிறோம்.

## ௨௦. சித்தத்தில் நிற்கும் சிவசக்தி

**தலைவி தடமுலை மேல்நின்ற தையல்**
**தொலைவில் தவஞ்செயுந் தூய்நெறித் தோகை**
**கலைபல வென்றிடும் கன்னியென் உள்ளம்**
**நிலைபெற இங்கே நிறைந்து நின் றாளே. 1060**

உயிர்க் குலத்தின் தலைவி அழகிய மார்பினை உடைய பெண் அவள். அழிவற்ற தவங்களைச் செய்யும் அறநெறிகளை (வழிகளை) அருளிச் செய்த தோகை மயிலனைய மங்கை, ஆய கலைகள் அனைத்தையும் உள் இருந்து உணர்த்தி அருளும் ஒப்பற்ற சிவசக்தி. அவளே என்னுள்ளத்தில் நிலைத்து நின்றருளினாள். (தடம் - அகன்ற, தையல் - பெண்)

திருமூலர் இப்பாடலில் சக்தியே அவருக்கு சித்ரூபிணியாக எண்ணம், வாக்கு, செயல் ஆகியவற்றை அருளினாள் என்று சொல்கிறார். அதாவது, ''அவளின்றி அணுவும் அசையாது'' என்பது யாவரும் அறிந்து உணர வேண்டிய தொன்று

அன்னை சகல கலைகளையும் தன் தோகையாகத் தாங்கும் மயில் போல உலவுகிறாள். கலை அவள் உருவம், கலைகள் அவளால் உண்டாக்கப்படுகின்றன. கலைகளையே அவள் தன் உரையாடலாகக் கொண்டிருக்கிறாள். ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாமத்தில் 236 சதுஷ் ஷஷ்டி கலாமயீ - 64 கலைகளின் வடிவமாயிருப்பவள். 327- கலாவதீ-கலைகளுடன் கூடியவள். 328. கலாலாபா- கலைகள் வடிவான பேச்சை உடையவள். 612. கலாநாதா - கலைகள் எல்லாவற்றிற்கும் தலைவி. 7.கலாநிதி - கலைகளின் நிதி மயில் தன்னுடைய தோகையைப் பரப்பி அழகுபெற ஆடுவதைப்போல் அன்னை கலைகளையும் தன்னிடமிருந்து புறப்பட விட்டு அனைவருக்கும் நலம் செய்கிறாள். மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழிலும்,''கலாமயிற் கூத்தயர் குளிர்புனம் மொய்த்திட்ட சாரல்'' என்று வரும்.

## 21. கருணைக் கடலான கடவுள்

**அளியொத்த பெண்பிள்ளை ஆனந்த சுந்தரி**
**புளியுறு புன்பழம் போலுள்ள நோக்கித்**
**தெளியுறு சித்துச் சிவகதி காட்டி**
**ஒளியுற வைத்தென்னை உய்ய உண்டாளே. 1064**

அளி என்றால் கருணை, ஆருயிர்கள் அனைத்திற்கும் ஒரே மாதிரியாகக் கருணை பொழிகின்ற பேரானந்தப் பெருவெள்ளமாகப் பேரழகு பிழம்பாக விளங்கும் சிவசக்தி இவள். புளியம்பழம் ஓட்டுடன் கூடி இருந்தாலும், அது ஓட்டுடன் ஒட்டாது தனித்திருப்பதைப் போல், உலகியலோடு பொருந்தி இருந்தாலும், அதிலே தோய்ந்து விடாதிருக்கும், என் உள்ள இயல்பறிந்து என் மனமயக்கம் போக, நல்லறிவு உண்டாக என் சித்தம் தெளிவடையச் செய்து சிவகதியை அடையும் வழியை எனக்கும் காட்டி, என் உள்ளம். ஒளிச்சுடராய் விளங்க என்னை உய்வித்து அருளினாள் (உய்தல்-- பிழைத்தல்)

மீண்டும் இங்கு திருமூலர், தனக்கு அன்னை சக்தி, முக்தி தர வழிகாட்டினாள் என்று உரைக்கிறார். அதாவது, ‘அவளன்றி ஊர் புகுமாறு அறியேனே’’ என்பதை நமக்கு நினைவு படுத்தி கொண்டிருப்பதிலருந்து அவர் எவ்வாறு அன்னையே தனக்கு --எல்லாம் என்று உறுதிகொண்டிருப்பவர் என்று அறிகிறோம்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாமம் மற்றும் ஸ்ரீலலிதா த்ரிசதீ அன்னையின் அளவிடமுடியாத கருணையைப் போற்றி பல திருநாமங்களைச் சொல்லுகின்றன. (முன்னும் பார்த்தோம்)

அனைத்து சாக்த அன்பர்களும் அன்னையை ஒரு கருணைக் கடலாக வர்ணிக்கின்றனர்.



## 22. காரணக் காரியம் யாவும் இவளே

**உண்டில்லை என்றதுருச்செய்து நின்றது**
**வண்தில்லை மன்றினுள் மன்னி நிறைந்தது**
**கண்டிலர் காரண காரணி தம்மொடு**
**மண்டல மூன்றுற மன்னிநின் றாளே. 1065**

கண்ணுக்குத் தெரிவது உருவம். கண்ணுக்கு புலப்படாதது அருவம், உருவமில்லாதது கண் பார்வைக்கு புலப்படாததாலேயே, இறைவன் இருக்கிறனா? இல்லையா (உண்டு இல்லை) என்று வாதிடும் மக்களுக்காக நுண்ணுடலாய் விளங்கும் சக்தி பரு உடலெடுத்து அருள் வளமிக்க தில்லைப் பொன்னம்பலத்தில் ஆனந்த கூத்தில் ஒன்றி இருக்கிறாள்.

உலக இயக்கத்துக்குக் காரணமாகவும், அதை இயக்கும் கருவியாகவும் சிவசக்தியே விளங்குகிறாள் என்பதை உலகோர் அறியார். சூரிய சந்திர அக்கினி (மண்டலம் மூன்று) என்னும் மூன்று மண்டலங்களிலும் பொருந்தி உயிரியக்கத்தை உலக இயக்கத்தை நடத்தும் காரண காரியக் கருவியாய் இருப்பவள் சிவசக்தியே! (மன்னி-பொருந்தி காரணி-இறைவியாகிய கருவி)

அபிராமி பட்டர் அபிராமி அந்தாதியில் (30) ''ஒன்றே! பல உருவே அருவே!'' என்று சொல்வதும் காண்க. ஸ்ரீலலிதா ஸஹ்ரநாமம் - 665. ஏகாகினீ - தனித்து இருப்பவள். 824. பஹுரூபா -- பல உருவங்கள் உள்ளவள். 137. நிராகாரா - உருவம் இல்லாதவள். அதாவது அருவமானவள். 666. பூமரூபா -அனைத்துமாக இருப்பவள். எனவே ப்ரஹ்ம வடிவானவள்.



## 23. அருள் நடம் ஆதி நடம்

**ஆதி நடம் செய்தான் என்பார்கள் ஆதர்கள்**
**ஆதி நடம் செய்கை யாரும் அறிகிலர்**
**ஆதி நடம் ஆடல் ஆரும் அறிந்தபின்**
**ஆதி நடம் ஆடலாம் அருட்சக்தியே... 2787**

ஆதியாகிய சிவப் பரம்பொருள் நடனம் ஆடினான் என்று சொல்வார்கள். அப்படி சொல்பவர்கள். இதைச் சரியாக புரிந்துகொள்ளாதவர்கள். இறைவன் நடனம் ஆடியதை யாரும் பார்த்ததில்லை.

ஆதியாகிய சிவம் எங்கே நடமாடுகிறான் என்று அறிந்து கொண்டால், இறைவன் அவரவர் உள்ளத்திலே தான் ஆடுகிறான் என்பதும், அவனுடலில் பாதியான அருட்சக்தியை அதற்குத் துணையாய் இருக்கிறாள் என்பதும் புரியவரும்.

சென்ற பாடலில் அன்னை சக்திதான் தில்லைப் பொன்னம்பலத்தில் ஆனந்த கூத்து ஆடுபவளாகச் சொன்னார். இங்கு அதை மேலும் உறுதிப்படுத்துகிறார் திருமூலர்.

இப்பாடலின் மூலம் திருமூலர் அன்னை மீது கொண்ட அளவற்ற அன்பையும், அசரா நம்பிக்கையும், அபிமானமும் அறிகிறோம்.



## 24. ஆருயிர்க்கெல்லாம் தாயானவள்

**கூரிய கண்ணி குலாயப் புருவத்தள்**
**சீரியளாய் உலகேழும் திகழ்ந்தவள்**
**ஆரிய நங்கை அமுத பயோதரி**
**பேருயி ராளி பிறிவறுத் தாளே. 1181**

அருள் கூறும் கண்கள் உடையவள். அழகிய வளைந்த புருவம் கொண்டவள். சிறந்த சிவப்பரம்பொருள் பங்கினள். ஏழு உலகங்களிலும் வியாபித்து இருப்பவள்.

(ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் - 400. வ்யாபினீ) உயர்ந்த தவப்பெண்மணி. அமுதம் ஊறும் அருள் வெள்ளக் கடல் இவள். எல்லா உயிர்களுக்கும் தாயாகித் தாங்கும் உயிர்ப்புடைய சக்தி இவள்.

(ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் -935 ஜகத்தாத்ரீ)

பிறவித்துயரில் இருந்தும், கன்ம வினைகளிலிருந்தும் என்னை விடுவித்து காத்தருள் செய்தாள். (குலாய-வளைந்த, சீரிய-சிறந்த, ஆரிய நங்கை - உயர்ந்தபெண். பிறவறுத்தள் - விடுவித்தல்)

அமுதபயோதரி : இம்மண்ணுலகில் உள்ள தாய்மார்களைப் போல் அல்லாது எச்சமயத்தும், எக்காலத்தும் அழுத குழந்தைக்கு அமுதம் தரும் தனங்களைக் கொண்டவள் அன்னை சக்தி.

திருஞான சம்பந்தருக்கு சீர்காழியில் ஞானப் பாலைப் புகட்டியவள் அன்னை அல்லவா! இதுதான் அன்னையின் சிறப்புத் தன்மை. இனிவரும் பாடல்களில் திருமூலர் அன்னை சக்தியை வெவ்வேறு வடிவங்களில் வர்ணிப்பதைக் காண்போமாக!

## 25. சிவசக்திஅபிராமி இவளே

**நல்குந் திரிபுரை நாதநா தாந்தங்கள்**
**பல்கும் பரவிந்து பாரண்ட மானவை**
**நல்கும் பரை- அபிராமி அகோசரி**
**புல்கு மருளுமப் போதந்தந் தாளுமே. 1048**

திரிபுரையான சக்தி நாதமும் நாதம் கடந்த நாதாந்த நிலையும் அருளுவாள். பரந்து விரிந்த பாருலகும் இன்னும் உள்ள பேரண்டங்களும் தருவாள். அபிராமி, அகோசரியாக விளங்கும் அன்னை, உயிர்களுடன் அன்போடு பொருந்தித் தன் பேரருளை, ஞானத்தைத் தந்து ஆட்கொள்வாள்.

(நல்குதல் - தருதல். பல்குதல் -பெருகுதல். புல்குதல் - பொருத்துதல். நாதம் - ஒலி. நாதாந்தம் - ஒலியின் முடிவு. பார்-உலகம். அண்டம்-அண்டங்கள். பரை -சிவசக்தி. போதம் - ஞானம் அருள் - திருவருள். ஆளும் - ஆட்கொள்ளும்)

அபிராமி: ஒப்புவமை சொல்ல முடியாத அபரிமிதமான பேரழகு உடையவள் அன்னை அபிராமி. திருக்கடவூரில் நின்ற கோலத்திலிருந்து அனைவரையும் ரட்சித்து அருள் புரிபவள்.

அகோசரி: மனதிற்கும் வாக்கிற்கும் எட்டாதவள். ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தில் இதே கருத்தில் அன்னையை 415. மனோவாசா மகோசரா என்று அருமையாகச் சொல்கிறது. இவ்வாறு இருந்தும் அன்னைஅபிராமி அன்பர்களை வலியத் தேடி வந்து அருள் புரிகிறாள். என்னே! அன்னையின் கருணையுள்ளம்!

முன்னூறு ஆண்டுகள் முன்னால் வாழ்ந்த அபிராமி பட்டர் அமாவாசைத் திதியைப் ‘பௌர்ணமி’ என்று கூறியதற்காக இம்மண்ணுலகில் அன்னை அபிராமி பௌர்ணமியைத் தோன்றச் செய்து புவனங்கள் பதினான்கையும் தன் அருள் ஒளியினால் மூழ்கச் செய்தவள் அன்றோ! (அன்னைஅபிராமி)

## ௨௬. இராஜராஜேஸ்வரி இவளே!

**தாளணி நூபுரஞ் செம்பட்டுத் தானுடை**
**வாரணி கொங்கை மலர்க்கன்னல் வாளிவில்**
**ஏரணி அங்குச பாசம் எழில்முடி**
**காரணி மாமணிக் குண்டலக் காதிக்கே 1049**

தாளணி நூபுரம் - திருத்தாள்களில் அணியும் ஆபரணம் சிலம்பு, செம்பட்டு உடை - திருமேனியில் அணிந்திருப்பது அழகிய சிவந்த பட்டாடை திருமார்பில் கச்சை, திருக்கரங்களில் மலரம்பு, கரும்புவில், அங்குசம், பாசம், திருமுடியில் மாணிக்க மணிக் கிரீடம், கருநீல மணிக்குண்டலங்கள் காதிலணிந்து காட்சி தருபவள் இராஜ இராஜேஸ்வரி.

(வாரணி - கச்சால் கட்டப்பட்ட, கொங்கை - மார்பகங்கள், கன்னல்-கரும்பு, வாளி -அம்பு. கார்-கரிய நிறம் குண்டலம் - காதணி.)

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தில் வரும் முதல் திருநாமா ஸ்ரீமாதா இதற்கு அடுத்ததாக வரும் இரண்டாவது திருநாமா - ஸ்ரீமஹா ராஜ்ஞீ - சிறப்பு மிக்க பேரரசி, அன்னை ஸ்ரீராஜராஜேஸ்வரரான மஹாகாமேச்வரருடைய பட்ட மஹிஷி. அதனால் ஸ்ரீமஹராஜ்ஞீ தானே முன்னின்று ஆட்சிமைத் தொழிலை நிர்வகித்து நடத்துவதால் அன்னையை 'ஸ்ரீமஹராஜ்ஞீ என்று அங்க தேவதைகள் அழைக்கிறார்கள்.

அவள் அணிவது எப்போதுமே செக்கச் சிவந்த பட்டாடை. அபிராமி பட்டர் அபிராமி அந்தாதியில் (53) 'சின்னஞ் சிறிய மருங்கினில் சாத்திய செய்யப்பட்டும்'' என்பார். ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் 37. அருணாருண கௌஸீம்ப வஸ்த்ர பாஸ்வத் கடீதடீ - மிகவும் சிறந்த சிவப்பு பட்டாடையில் ப்ரகாசிக்கும் இடையை உடையவள். 14 குருவிந்த மணி- ச்ரேணி- கநத்-கோடீர- மண்டிதா - பத்மராக மணிகள் வரிசையாகப் பதிக்கப் பெற்று ஒளிவீசும் அழகிய கிரீடத்தை அணிந்தவள். (பத்மராகம் - சிவப்பு நிறம்)

# 27. சக்தி சண்டிகை இவள்



**குண்டலக் காதி கொலைவிற் புருவத்தள்**
**கொண்ட வரத்த நிறமன்னு கேலாத்தள்**
**கண்டிகை ஆரம் கதிர் முடி மாமதிச்**
**சண்டிகை நாற்றிசை தாங்கிநின்றாளே. 1050**

குண்டலங்கள் அணிந்த காதுகள் உடையவள். கொல்லும் வில் போன்ற புருவம் கொண்டவள். செக்கத் சிவந்த நிறமுடைய திருமேனியானவள். கழுத்தில் கண்டிகை ஆரத்தையும், ஒளிவிடும் திருமுடியில் பிறைச் சந்திரனையும் தாங்கி நிற்கும் திருக்கோலம் கொண்ட சண்டி, திசைகள் நான்கினையும் காக்கும் திருவுளம் கொண்டவள்.

இப்பாடல் திருமூலர் அன்னை சக்தியை சண்டிகா தேவி திருக்கோலத்தில் காண்கிறர். - அபிராமி பட்டர் அபிராமி அந்தாதியில்(77) ‘‘வஞ்சர் உயிர் அவி உண்ணும் உயர் சண்டி’’ என்பார். வஞ்சகர்களின் உயிராகிய அவியை உண்ணும் உயர்ந்த சண்டிகாதேவியும் இவளே. வேள்வியில் தேவதைகளுக்கு

அளிக்கும் உணவை ‘‘ஹவிர் பாகம்’’ என்பர் வட நூலார். அதுவே தமிழில் அவி’ என்றும் குறிக்கப்படுகிறது. ‘‘அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின்’ என்று திருவள்ளுவரும் அச்சொல்லை சொல்கிறார்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம்-755 சண்டிகா -- கோபம் உள்ளவள். தன்னிடம் பக்தி இல்லாதவர்களிடம் கோபம் கொண்டவள். சண்டன், முண்டன் என்ற அசுரர்களைக் கொன்றதால் ‘‘சாமுண்டா’ என்ற பெயர். சண்டிகா தேவியின் பெயரால் ஏற்பட்ட நகரம்தான் ‘சண்டீகர்’ ஆகும். மைசூருக்கு அருகில் சாமுண்டேஸ்வரி கோயில் மிகவும் பிரபலமானது. ஸ்ரீவித்யா உபாசனையில் ‘‘ஸப்தசதீ’’ (700 ஸ்லோகங்கள்) பாராயணமும், சண்டிஹோமமும் முக்கிய அங்கங்களாகும்.



## 28. கலைமகளும் இவளே

**நின்றாள் அவன்தன் உடலும் உயிருமாய்ச்**
**சென்றாள் சிவகதி சேரும் பராசக்தி**
**ஒன்றாக என்னுட் புகுந்து உணர்வாகியே**
**நின்றாள் பரஞ்சுடர் ஏடங்கை யாளே. 1066**

பரம்பொருளின் உயிரும் உடலுமாய் இருப்பவள் சிவசக்தி. சீவர்களைச் சிவநெறியில் சேர்ப்பதற்கு, செலுத்துவதற்கு, ஆன்மாக்கள் உள்ளமெல்லாம் சென்றருளுகிறாள். இவளே என் உள்ளத்துள்ளேயும் புகுந்து என் உணர்வில் பொருந்தியும் இருக்கிறாள். இவள் வேத விழுப்பொருளாக, ஏடு கையில் கொண்ட ஒளிச் சுடராய் விளங்கும் கலைமகளாவாள்.

தனக்கு ஞானத்தை தந்து அருளிய கலைமகளாக அன்னை சக்தியை காண்கிறார் திருமூலர். இப்பாடலில் பரம்பொருளைப் பற்றிய ஞான உணர்வும் தருவது அன்னை சக்தியே! அன்னை இந்த ஞானத்தை தராவிட்டால் பசுக்களாகிய சீவர்கள் பாசத்தின் பிடியிலிருந்து விடுபடுவது இயலாதன்றோ ?

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் -727 சிவஞானப்ரதாயினீ சிவதத்துவத்தை உணர்த்துபவள். சிவமான அறிவை அளிப்பவள். ‘சிவ என்றால் மங்களம். அந்த ஞானத்தை அதாவது ப்ரஹ்ம ஞானத்தைத் தருபவள். 416.- சிச்சக்தி - ஞானமே வடிவானவள் 480. சிவபரா - தன் பக்தர்களுக்கு சிவனைக் காண்பிப்பவள். சிவனுக்கும் மேற்பட்டவள்.



# 29. வெள்ளைத் தாமரை மீதும் வீற்றிருப்பவள்



**ஏடங்கை நங்கை இறைஎங்கள் முக்கண்ணி**
**வேடம் படிகம் விரும்பும் வெண் தாமரை**
**பாடுந் திருமுறை பார்ப்பனி பாதங்கள்**
**சூடுமென் சென்னிவாய்த் தோத்திரஞ் சொல்லுமே. 1067**

ஏடு அங்கை நங்கை இறைவி - கையிலே ஏடு தாங்கி இருக்கும் இறைவி, இவள் எங்கள் தலைவி. முக்கண்ணுடைய தேவி. இவள் தோற்றம் - படிகம் போன்ற தூய வெண்மை நிறம். இவள் விரும்பி இடம் கொண்டிருப்பது வெள்ளைத் தாமரை மலரில். நாத வடிவாய் விளங்கும் இவளைத் திருமுறைகள் போற்றி பணிந்து பாடும். எல்லாவற்றிற்கும் மேலான பராசக்தியாகிய இவளின் பாதங்களைத் தலைமேல் கொண்டு, துதித்துத் தோத்திரம் பாடித் தொழுவீர்களாக. (படிகம் - பளிங்கு, பார்ப்பனி-உலகநாயகி)

சென்ற பாடலிலும், இப்பாடலிலும் திருமூலர் அன்னை சக்தியை சரஸ்வதி வடிவத்தில் காண்பதை நாம் உணருகிறோம்.ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் - 704 சரஸ்வதீ - ஞான -அபிமான தேவியான ஸரஸ்வதியாக இருப்பவள். 705 சாஸ்த்ரமயீ - சாஸ்திர வடிவினள். சாஸ்திரத்தாலேயே அறியத்தக்கவள். அதற்காகவே சாஸ்திரங்களை உண்டாக்கியவள்.

ஒருதாய் சேய்க்கு கல்வி புகட்டுவது போல் இப்வுலக உயிர்களுக்கு ஞானத்தை தரும் ஸ்ரீமாதா - அன்னை சக்தியே.

## 30. அன்னை காமாட்சியாக

**தோத்திரஞ் செய்து தொழுது துணையடி**
**வாய்த்திட ஏத்தி வழிபடுமாறு இரும்**
**பார்த்திடு மங்குச பாசம் பசுங் கரும்பு**
**பார்த்திடும் பூம்பிள்ளை யாகுமாம் ஆதிக்கே. 1068**

தோத்திரங்கள் பாடித் துதி செய்து வணங்கி அவள் திருவடிகள் இரண்டையும் வாழ்த்தி வழிபட்டு இருங்கள். இப்படி இருக்கின்ற நிலையில் தியானித்திருக்க, அங்குசம், பாசம், பசுங்கரும்பு, மலரம்பும் கைகளில் ஏந்தியவளாய்க் காட்சி தரும், காமாட்சியைப் பார்த்திடுங்கள், (பூம் பிள்ளை - மெல்லியள்)

தனது திருக்கரங்களில் அன்னை காமாட்சி (காஞ்சீபுரம் காமாட்சியம்மன் திருக்கோயில்) அங்குசம், பாசம் - மலர் அம்புகள், கரும்பு வில்லுடன் திருக்கோலம் பூண்டு காண்போர்க்கு சக்கரவர்த்தினியாக காட்சி தருகிறாள். அவள் காலடியில் ஸ்ரீசக்கரம் ப்ரதிஷ்டிக்கப் பட்டிருக்கிறது. இவ்வாறு அன்னை ஆயுதங்களை தரித்திருப்பது பக்தர்களின் காம குரோதங்களை அடக்கி பற்றுகளை (ஆசை) அகற்றுவதற்கே.

அன்னை தாமரை, மாம்பூ அசோக மலர், முல்லை, நீலோற்பலம் ஆகிய மலர்களை அம்புகளாகக் கொண்டு பக்தர்களுக்கு விரும்பத்தக்க சப்த ஸ்பர்ச ரூப, ரஸ, கந்த குணங்களின் சுகமயமான அனுபங்களைத் தருவாள். அன்பர்களின் ''மனதை'' கட்டுக்குள் வைத்திருக்க கரும்பை வில்லாகக் கொண்டுள்ளாள். ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம்- 62.காமாக்ஷீ- அழகான கண்களையுடையாள். காமேச்வரனையே (கண்ணுக்கு) கண்ணாக உடையவள். பக்தர்களின் ஆசைகளை பூர்த்தி செய்பவள். கா-சரஸ்வதி, மா-லக்ஷ்மீ இவர்களைக் கண்களாய் கொண்டவள். காஞ்சிபுரம் அன்னையின் 51 பீடங்களில் ஒன்று. தேவியின் ஒட்டியாணம் அணியும் உடற்பகுதி விழுந்த இடம் காஞ்சீபுரம் என்று சொல்வார்கள்.

## 31. அன்னை மீனாட்சியாக

**பிதற்றிக் கழிந்தனர் பேதை மனிதர்**
**முயற்றியின் முத்தி அருளும் முதல்வி**
**கயற்றிகழ் முக்கண்ணுங் கம்பலைச் செவ்வாய்**
**முகத்தருள் நோக்கமும் முன்னுள்ள தாமே. 1116**

அறியாமையினால் வீண் பேச்சுப் பேசியே காலத்தை வீணாக்குகின்றனர். பாவம்! இந்த அறிவற்ற மனிதர்கள்! முயன்றால் மோட்ச இன்பத்தைத் தந்தருளும் மூல முதல்வி, மீன் போலப் பார்வையாலேயே அருள் பொழியும் முக்கண்ணுடையவள், ஒலிக்கு உயிர் தரும் சிவந்த வாயும், திருவருள் விளங்கும் கருணை பொழியும் அருட்பார்வை அருளும் முகமும் முன்னின்று உதவும். மீன்கள் தங்கள் பார்வையாலேயே தன் குஞ்சுகளைப் பராமரிப்பது போல இறைவி தன் அருட்பார்வையாலேயே, ஆருயிர்கட்கு அன்பு செய்வதால், ''மீன் போலும்'' கண் என உவமிக்கப்பட்டது. (கம்பலை - ஒலி)

இங்கு திருமூலர் வெகு அருமையாக அன்னையின் கண்களை வர்ணிக்கிறார். 'முன்னுள்ளது' என்று அவர் கூறுவது. முயற்சி செய்பவர்க்கு அன்னை தானாக முன் வந்து என்பதை குறிக்கிறது. லலிதா ஸஹஸ்ரநாமமும் அன்னையின் கண்களை மீனுடைய கண்களுக்கு உவமையாக வர்ணிக்கிறது

18. வக்த்ரலக்ஷ்மீ-பரீவாஹ-சலன்- மீனாபலோசனா - முகத்தின் அழகு வெள்ளத்தில் சலிக்கும் மீன்களைப் போன்ற கண்களை உடையவள். இதனால் அவளுக்கு மீனாட்சி என்ற பெயர். அதுவே இங்கு ''மீனாபலோசனா'' எனப்பட்டது.

மதுரை மீனாட்சியம்மன் திருக்கோவில் நின்றளும் அன்னை மீனாட்சியின் கண்களின் அழகினைக் காண கண்கோடி வேண்டுமல்லவா! இங்குள்ள பொற் தாமரைக்குளத்தில் மீன்கள் வாழ்வதில்லை என்று கூறுவார்.

## 32. அன்னை மனோன்மணியாக

**நின்றவள் நேரிழை நீள்கலை யோடுகிற**
**என்றன் அகம்படிந்தேழுல குந்தொழ**
**மன்றது வொன்றி மனோன்மணி மங்கலி**
**ஒன்றென்ன ஒன்றநின்று ஒத்தஅுடைந்தாளே. 1061**

என் உள்ளம் நிறைய நின்றருளிய அழகிய அணிமணிகள் அணிந்த அந்தத் தேவி உமையவள், பூரண கலைகளாடு என் உள்ளம் பொருந்தி, ஏழுலகங்களும் வணங்கித் தொழ வந்திருந்தாள். பொன்னம்பலத்திலே பொருந்தி உள்ள மனோன்மணி என்றும், நல்ல செல்வப் பேறு எல்லாம் தரும் மங்கலமாகவும், சிவன் வேறு, தான் வேறு என்று இல்லாமல் சிவசக்தியாக ஒத்திருந்தாள், (நேரிழை - அழகிய ஆபரணங்கள், மன்று - அம்பலம்)

இங்கு திருமூலர் அன்னை சக்தியை மங்கல நாயகி மனோன்மணியாகக் காண்கிறார். சிவனும் சக்தியும் ஒரே பரம்பொருளாக இணைந்திருப்பது. இதை வெகு அருமையாக ஶ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் சொல்கிறது.

999.சிவசக்தியைக்ய ரூபிணி - சிவ சக்தி - ஐக்ய ரூபிணி. விளக்கும் - ஒளியும், வாக்கும், அர்த்தமும் போல சிவனும் சக்தியும் ஒன்றே. அபிராமிபட்டர், ‘‘சொல்லும் பொருளும் என நடமாடும் துணைவருடன்’’ - (அபிராமி அந்தாதி - 28) என்று இக்கருத்தினைச் சொல்கிறார்

சிவனையும் சக்தியையும் தனித்தனியாக வழிப்படாமல் இருவரையும் ஒன்றினைந்த பரம்பொருளாக உணர்ந்து வணங்குவது உத்தமமாகும். 207.மனோன்மனீ - மனோன்மனீ ரூபமாக இருப்பவள் ‘‘உன்முகம்’’ என்றால் மேல் நோக்கியது என்று பொருள். மனத்தை மேல் நோக்கி அல்லது மேல் நிலைக்கு எழுப்புபவள். மனோன்மணீ சக்தியின் இருப்பிடம் புருவமத்திக்கு மேலுள்ளது என்பர்.

## 33. மங்கள நாயகி மனோன்மணி

**ஒத்தடங் கும்கம லத்திடை ஆயிழை**
**அத்தகை செய்கின்ற வாய பெரும்பதி**
**மத்தடை கின்ற மனோன்மணி மங்கலி**
**சித்தடைக் கும்வழி தேர்ந்துண ரார்களே. 1062**

ஒத்தடங்கும் -- சிவப் பரம்பொருளோடு ஒன்று சேர்ந்திருந்த தாமரைத் தண்மலரில் வீற்றிருக்கும் செல்வி, அருள் புரிந்து ஆன்மாக்களை ஆட்கொள்ளும். ஒப்பற்ற பெரும் தலைவனாக இருக்கின்ற சிவப் பரம்பொருளை (அப்பதி)ச் சேர்ந்து மகிழும் மனோன்மணி, மங்கலச் செல்வியாகிய சிவசக்தியை வழிபடுவோர்களில் பலர் அவளைத் தங்கள் சித்தத்துள்ளே சேர்த்து வைத்திருக்கும் வழி அறியாதிருக்கின்றார்கள். (மத்து - மகிழ்ச்சி)

சித்தடைக்கும் வழி- மனத்துக்குள் வைக்கும் வழி, இதைச் சித்துகளை அடையும் வழி என்றும் பொருள் கொள்வர்.

அன்னை தாமரை மலரில் வீற்றிருப்பதை அனைத்து சாக்த நூல்களும் கூறுகின்றன. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமம் 278 பத்மாஸனா - தாமரையில் வீற்றிருப்பவள் (பத்மம் - தாமரை) தாமரையை ஆசனமாகக் கொண்டவர்கள். பிரம்மா, ஸரஸ்வதி, லக்ஷ்மீ ஆகிய மூவரும் ஆவர். இம்மூவரின் வடிவமும் தேவியே தான் என்பதால், ‘‘பத்மாஸனா’’.

இங்கு திருமூலர் உலகில் பலர் தங்கள் சித்தத்தில் அன்னையை வைத்து வழிபடத் தெரியாமல் இருக்கின்றார்கள் என்று வருத்தப்படுவதைக் காண்கிறோம். அதாவது சித்ரூபிணீயாக இருந்து நமக்கு நல்வழி காட்டுபவள் அன்னை சக்தி என்பதை நாம் உணர்ந்து கொள்ளவேண்டும்.

## 34. உள் ஒளியாக ஒளிரும் தேவி

**உணர்ந்துட னேநிற்கும் உள்ளொளி யாகி**
**மணங்கமழ் பூங்குழல் மங்கையுந் தானும்**
**புணர்ந்துடனே நிற்கும் போதருங் காலைக்**
**கணிந்தெழு வார்க்குக் கதியளிப் பாளே. 1063**

சென்ற பாடலில் திருமூலர் உலகில் பலரும் தங்கள் சித்தத்தில் சிவசக்தியை வைத்து வழிபடாமல் இருக்கிறார்கள் என்று குறைபட்டுக் கொண்டார். ஆனால் அவ்வாறு வழிபடத் தெரிந்தவர்களுக்கு அன்னை எவ்வாறு அருள் புரிவாள் என்று விளக்கும் பாடல் இது.

சித்தத்துள்ளே அவளைச் சேர்ந்திருக்கத் தெரிந்தவர்களுக்கு, அச்சிவசக்தி உள்ளத்துள்ளே ஒளிச்சுடராய் திகழ்ந்திருப்பாள். சிவ ஒளியோடு கூடிச் சிவனின் அக ஒளியில் தெரிவாள். வாச மணமுள்ள மலர்களைச் சூடிய கூந்தல் உடைய சக்தியும் சிவனும் சேர்ந்து இருக்கும் நிலையில் அச்சக்தியை எண்ணித் துதிப்பவர்களுக்கு நற்கதி -- மேல் நிலை - அளித்தருளுவாள்.

(புணர்ந்து - சேர்ந்து, போதரும் காலை - இருக்கின்றபோது, கணிந்து - கணித்து நினைத்து, கதி -மேல்நிலை)

''சித்தம் போக்கு, சிவன் போக்கு'' என்று நடைமொழி சொல்வதும் நோக்குக! இதன் கருத்து யாதெனில் நம் சித்தம் சிவகதி அடைந்தால் அதன் போக்கு சிவன் படிதான் செல்லும். சித்தர்களின் போக்கு மனிதர்களால் புரிந்து கொள்ள முடியாததொன்று. அவர்கள் என்ன செய்வார், எங்கு இருப்பார்கள் என்றும் கூறமுடியாது. அவர்களின் போக்கு எல்லாம் சிவனின் செயலாகும் என்பர் அறிந்தோர்.



## 35. புனிதை புராதனி மனோண்மணி

**ஆதியனாதி யகாரண காரணி**
**சோதிய சோதி சுகபர சுந்தரி**
**மாது சமாதி மனோன்மணி மங்கலி**
**ஓதியென் உள்ளத்து உடன்இயைந்தாளே. 1114**

ஆதியனாதி - அளந்தறிய இயலாத தொன்மையான காலத்தவள். தனக்கு ஒரு காரணம் இல்லாதவள். என்றாலும் எல்லாவற்றிற்கும் தோற்றம், இயக்கம், ஒடுக்கம் என அனைத்துக்கும், காரணமாக இருப்பவள். சோதி வடிவாகவும், சோதியற்ற மாயையாகவும், சுகந்தரும் பேரழகுடையவள். மாதர்களின் அரசி. அவளே மாதவச் செல்வியாக, மனோன்மணியாக, மங்கலங்கள் அருளுபவளாகவும் எனக்குப் பலவாகத் தன்னைக் காட்டியருளித் தன்னியல்பை நான் அறியச் செய்து என்னுள் என்னாக, பிரியாது பொருந்தி இருந்தாள். (அனாதி-தொன்மை, அகாரணம் - காரணமில்லாதது அசோதி - ஒளியற்றது, மங்கலம் - நன்மைகள், ஓதி - அறியச்செய்து)

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் இப்பாடலின் கருத்தினை பின்வரும் திரு நாமாக்களில் விளக்கியது போல் அமைந்துள்ளது. 296. அநாதிநிதனா-ஆதியும் அந்தமும் இல்லாதவள் 802. புராதனா - பழம் பொருள் எல்லோருக்கும் முந்தி இருப்பவள்) சிருஷ்டிக்கு முன்னாலேயே இருப்பவள். இவளிடமிருந்து தான் சிருஷ்டி ஆரம்பித்தது. ஆகையால் ‘புராதனா’.

மாணிக்க வாசகரும் திருவெம்பாவையில் (9) ‘‘முன்னைப் பழம் பொருட்கும் பழம் பொருளே’’ என்று கூறுவது காண்க. 152 நிஷ்காரணா- காரணமில்லாது இருப்பவள் 192. ஸுகப்ரதா - சுகத்தைத் தருபவள். 806 - பரஞ்ஜ்யோதி - பேரொளியாக இருப்பவள் 215. மஹாமாயா - மஹாமாயா ரூபிணியாக இருப்பவள்.

# 36. மங்கலம் தரும் மனோன்மணி

**ஆதி அனாதியும் ஆய பராசக்தி**
**பாதி பராபரை மேலுறை பைந்தொடி**
**மாது சமாதி மனோன்மணி மங்கலி**
**ஓதுமென் னுள்ளத்து உடன்முகிழ்த் தாளே. 1120**

எல்லாவற்றிற்கும் முதலாகவும் (ஆதி) முடிவாகவும் உள்ள பராசக்தி, பரம் பொருளாகிய சிவத்தின் பாதி உடம்பில் பொருந்தி இருக்கின்ற பச்சை மரகதக் கொடி போன்றவள் (பைந்தொடி). எல்லாக் கடவுளர்க்கும் மேலானவள். அனைத்தையும் தன்னிடம் நிலைக்கச் செய்யும் ஆற்றல் உடையவள்.(சமாதி-நிலைத்தல்) மனதைக் கவரும் மனோன்மணி. எல்லா மங்களங்களும் தருபவள். அவளை மனத்தில் நினைத்து - 'ஓம்' என்று உச்சரித்த (ஒத) உடனே உள்ளத்துள்ளே தோன்றி அருளுவாள். (முகிழ்த்தல் - தோன்றி மலர்தல்)

இப்பாடலில் திருமூலர் அன்னை சக்தி எல்லாத் தெய்வங்களுக்கும் மேலானவர் என்று தெள்ளத் தெளிவாக உரைக்கிறார்.அபிராமி பட்டரும்அபிராமி அந்தாதியில் (44) - ''இவளே கடவுளர் யாவர்க்கும் மேலே இறைவியுமாம்'' என்று கூறுகிறார்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் 369. பரதேவதா - சிறந்த எல்லோரிலும் உயர்ந்த தெய்வமாய் இருப்பவள். 406. சிவாராத்யா - சிவனால் வழிபடப் பெற்றவள். 200.ஸர்வ மங்கலா - எல்லா மங்கலங்களையும் உடையவள்.

ஆதிசங்கரரும் ஸௌந்தர்யலஹரியில் (25. த்ரயாணாம் தேவானாம்) 'அன்னையை வழிபட்டால், அது அனைத்து தெய்வங்களையும் வழிபட்டதாகும்' என்று கூறுவதும் காண்க.

## 37. பூமேல் உறையும் புண்ணியள்

**தாமேல் உறைவிடம் ஆறிதழானது**
**பார்மேல் பதினெட்டு இருநூறுள**
**பூமேல் உறைகின்ற புண்ணியம் வந்தனள்**
**பார்மேல் உறைகின்ற பைந்தொடியாளே. 1141**

எல்லாவற்றிக்கும் மேலாக அன்னை சக்தி இருக்கும் இடமாகக் கொண்டிருப்பது ஆறு இதழ்களைக் கொண்ட சுவாதிட்டானச் சக்கரமாகும். இதற்குமேல் இரு நூற்றுப் பதினெட்டு உலகங்கள் உள்ளன. சகஸ்ரதளத்தில் தங்கி இருக்கிற இவள், புண்ணியப் பயனால், அன்பால் பணிபவர் மனம் கொண்டு எழுந்தருளி உள்ளாள். இவளே மண்ணகத்தில் எழுந்தருளியுள்ள மகாசக்தி. மனோன்மணியாவாள். (பார்-பூமி சுவாதிட்டானச் சக்கரம் -பூமிதத்துவம், சகஸ்ரதளம் - நெற்றியின் உச்சி, இங்கு ஆயிரம் இதழ் கொண்ட பொற்றாமரை மீது தேவி சிவனுடன் வீற்றிருப்பவள் பைந்தொடியாள் - பசிய வளையல்கள் அணிந்த நாத வடிவான நாயகி.

எங்கோ யாவருக்கும் புலப்படாதவாறு அப்பாலுக்கு அப்பாலாய் பரவெளியில் உறையும் அன்னை சக்தி அன்பர்களின் அன்பிற்கு கட்டுப்பட்டு அனைத்து மங்கலங்களையும் அளிக்கும் மகாசக்தி மனோன்மணியாக மண்ணகத்தில் எழுந்தருளியுள்ளாள் என்கிறார் திருமூலர்.

ஸ்ரீலலிதா சஹஸ்ரநாமம் 207. மனோன்மனீ - தன்னை தியானம் செய்யும் பக்தர்களுக்கு அவர்கள் மனதில் உத்க்ருஷ்டமான ஞானத்தோடு கூடியிருக்கும் உன்மனீ பாவத்தை உண்டு பண்ணுவதால் அன்னைக்கு மனோன்மனீ என்று பெயர். உன்மனீ பாவம் என்பது மனத்தை புற விஷயங்களில் செலுத்தாமல் உள்முகமாக திருப்புதல்.

## 38. அருள் உரை செய்யும் மனோண்மணி

**அம்பன்ன கண்ணி அரிவை மனோன்மணி**
**கொம்பன்ன நுண்ணிடைக் கோதை குலாவிய**
**செம்பொன்செய் யாக்கை செறிகமழ் நாடொறும்**
**நம்பனை நோக்கி நவிலுகின்றாளே. 1147**

அம்பு போன்ற கூர்மையான கண்களை உடைய தலைவி சக்தி - மனோன்மணியாவாள். கொழுகொம்பைப் பற்றிப் படரும் கொடி போலச் சிவப் பரம்பொருளோடு சேர்ந்திருப்பவள். செம்பொன்னால் செய்தது போன்ற சிவப்பரம்பொருளுடன் ஜகத்தைச் செலுத்தி ஆள்பவள். ஆன்மாக்கள் உய்வதற்கு அருள் உரை செய்பவளுமாவாள்.

(குலாவிய - மகிழ்ந்திருக்க, யாக்கை - உடம்பு, செறிகமழ் - மணம் நிறைந்து வீசும், நவிலுதல் - உபதேசித்தல்)

பெற்ற தாய் தன் சேய்களுக்கு புத்திமதி புகட்டுவது போல், அகிலாண்டாத்திற்கும் அன்னையான சக்தி மனோன்மணியாக மக்களுக்கு மனதைப் புற விஷயங்களில் செலுத்தாமல் உள்முகமாக தியானிப்பதற்கு அருளுபதேசம் செய்வாள் என்பதே இப்பாடலின் கருத்து.

அன்னையின் கண்களை, சாக்த அன்பர்கள் கூர்மையாக வர்ணிப்பதன் காரணம் அவள் பார்வையை குறிக்கும். எங்கும் ‘எப்போதும் அன்னை கவனமாக தன் பார்வையைச் செலுத்துகிறாள். ஒரு தாய் சேவையைக் காண துடிக்கும் போது அவளின் பார்வை மிகவும் கவனமாக இருக்கும் அல்லவா! அதுபோல் அன்னை சக்தியும் தன் அன்பர்களைக் கவனிப்பதில் கண்ணும் கருத்தும் உடையவள். அன்னை மெல்லியவள் என்பதால் அவளைக் கொடியாகச் சொல்லுகிறார் திருமூலர். அபிராமிபட்டரும் ‘கொடியே இளவஞ்சிக் கொம்பே’’ என்பார். ஸ்ரீலலிதா சஹஸ்ரநாமம்- 437 -கோமலாகாரா - மென்மையான வடிவமுடையவள், 721-கோமளாங்கி- அழகிய, மிருதுவான சரீரத்தை உடையவள்.

## 39. என்னுள் புகுந்தாள் மனோன்மணி

**பேச்சற்ற நற்பொருள் காணும் பெருந்தகை**
**மாச்சற்ற சோதி மனோன்மணி மங்கையாம்**
**காச்சற்ற சோதி கடவுளுடன் புணர்ந்து**
**ஆச்சென்று என்உள் புகுந்து ஆலிக்கும் தானே. 1160**

பேச்சற்றுச் சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற சிவத் தியானத்தில் உணரப்படுபவன் பரம்பொருளாகிய சிவபெருமான். மாசில்லாத தூய மாமணிச் சோதி, மனோன்மணி மங்கை நல்லாளாகிய பராசக்தி. இவள் விருப்பு வெருப்பற்ற சோதிச் சுடரான பரம்பொருளுடன் கூடி என்னுள்ளத்துள்ளே தங்கி என் மனத்தை மகிழ்ச்சியில் குதூகலிக்கச் செய்தருளினாள்.

(மாச்சற்ற- மாசற்ற குறையில்லாத, காச்சற்று-வெறுப்பு, பகை இன்றி, ஆச்சென்று - அசைச் சொல், ஆலிக்கும் - குதூகலம் அடையச் செய்யும்)

திருமூலரின் சொந்த அனுபவத்தை இந்தப் பாடல் மூலம் அறிகிறோம். அன்னை தனது உள்ளத்தில் உட்கார்ந்து தன்னை மகிழ்ச்சியில் மூழ்கச் செய்தாள் என்று குதூகலத்துடன் சொல்கிறார். அபிராமிபட்டரும், ‘‘வருந்தாவகை என் மனத் தாமரையினில் வந்து புகுந்து இருந்தாள் பழைய இருப்பிடமாக’’ (அபிராமி அந்தாதி-90) என்று மிகவும் உற்சாகமாக உரைக்கிறார்.

எல்லா சேய்களும் விரும்புவது தன் தாய் தன்னுடனேயே இருக்க வேண்டும் என்பது. அப்போது சேய்களுக்கு யாதொரு கவலையுமில்லையே! எப்போதும் இன்பம் தானே! அதாவது பரம்பொருள் நம்முடன் இருந்து விட்டால் அதை விட சிறந்த முக்தி ஆனந்தம் உண்டோ?



## 40. மாயா மனோன்மணி

**சொல்ல வொண்ணாத அழற்பொதி மண்டலம்**
**சொல்ல வொண்னாது திகைத்தங்கிருப்பர்கள்**
**வெல்ல வொண்ணாத வினைத்தனி நாயகி**
**மல்ல வொண்ணாத மனோன்மணி தானே. 1164**

சொல்லால் விளக்க இயலாத பேரொளிப் பிழம்பாக உள்ள இறைவனின் அருள் வெள்ளமாகிய ஆட்கொள்ளும் கருணைத் திறம்; இதனை அடைந்து இன்புறும் வழி அறியாது திகைத்திருப்பவர்கள், அறியாமையை நீக்கி, அப் பரம்பொருள் அருளை அடைய முடியாது. தடுக்கும் வினைத்துயரை வெற்றி கொள்ள இயலாது தவிப்பதற்குக் காரணமாக இருப்பவள் மகாசக்தியான மனோன்மணியே ஆகும். இந்த மாயையை வெல்ல அவள் மலரடி பணியுங்கள்.

(ஒண்ணாத - முடியாத, அடில் - நெருப்பு. பொதி - நிறைந்த. வினை-செயல், வினைத்துன்பம் மல்ல - வெற்றி கொள்ள).

இம் மண்ணுலகில் பிறந்த மானிடர்கள் இறைவனை அடைமுடியாதபடி மாயையால் சிக்கித் தவிக்கின்றார்கள். அறம், பாவம் என்ற இருவினை நம்மை ஒவ்வொரு பிறவியிலும் தொடர்ந்து வருகின்றது. இதிலிருந்து மீண்டு பிறவித்துயரைக் களைய வேண்டுமானால் முதலில் நாம் நம்மிடமுள்ள அறியாமையை அகற்றவேண்டும். இந்த அறியாமையை அகற்ற மாயா சக்தியாக உள்ள மனோன்மணியின் தாமரைத் திருவடிகளைத் தஞ்சம் கொள்ள வேண்டும். இதுதான் திருமூலர் நமக்குச் சொல்லும் அறிவுரை.

அபிராமிபட்டர், அபிராமிஅந்தாதியில் (9) ''சுந்தரி எந்தை துணைவி என் பாசத் தொடரை எல்லாம் வந்தரி...'' என்று அன்னையிடம் வேண்டுகிறார். அன்னையை ''மஹாமாயா என்று ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் கூறுகிறது. (முன்னும் பார்த்தோம் )

## 41. யோகமான மனோன்மணி

**இதுவப் பெருந்தகை எம்பெருமானும்**
**பொதுவக் கலவியும் போகமுமாகி**
**மதுவக் குழலி மனோன்மணி மங்கை**
**அதுவக் கல்வியுள் ஆயுழி யோகமே. 1171**

இது அப்பெருந்தகை எம்பெருமானும் - இது என்று சுட்டப்படும் பராசக்தியும், பேரருட் பெருந்தகையாகிய சிவப் பரம்பொருளும், இன்பமும் அடையப் பெறும் ஞானமும் போலக் கூடி (பொதுவக் கலவியும் போகமும் ஆகி) உள்ளத்துள்ளே இன்பத் தேன் மனோன்மணியாகிய தேவி; அது அக் கல்வியுள் ஆயுழி யோகமே - ஆருயிர்கட்கு அவை பெறும் கல்வியும் அதன் மூலம் அடையும் யோகமுமாக இருப்பாள். (போகம் - இன்பம், மது-தேன், ஆயுழி - ஆராய்ந்து பார்க்கின்றபோது யோகம் - பயன்)

திருமூலர் சென்ற பாடலில் அன்னை சக்தியை மாயாரூபிணியாக வர்ணித்தார். இங்கு அவளே அந்த மாயை நீக்கி கல்வியறிவைத் தந்து, அதன் பயனாக ஞானத்தை அடையும் வழியையும் காட்டுவாள் என்கிறார். பாரதியாரும் ''யாதுமாகி நின்றாள் காளி'' என்று சொல்வதையும் நோக்குக.

அபிராமி பட்டர், அபிராமி அந்தாதியில் (36)

''பொருளே பொருள் முடிக்கும் போகமே அரும்போகம் செய்யும்,
மருளே மருளில் வரும் தெருளே என் மனத்து வஞ்சத்து,
இருளேதும் இன்றி ஒளிவெளியாகி இருக்கும் உன்றன்,
அருளேது அறிகின்றிலேன் அம்புயாதனத்து அம்பிகையே''

என்று வெகு அருமையாகக் கூறுகிறார். அதாவது அனைத்தினிற்கும் அன்னை சக்தி தான் மூலமாய் இருப்பவள். ''அவளின்றி அணுவும் அசையாது'' என்பதே சாராம்சம்.

## 42. ஞானமான மனோன்மணி

**மார்க்கங்கள் ஈன்ற மனோன்மணி மங்கலி**
**யார்க்கும் அறிய அரியாள் அவளாகும்**
**வாக்கும் மனமும் மருவி ஒன்றாய் விட்ட**
**நோக்கும் பெருமைக்கு நுண்ணறிவாமே. 1227**

உலகம் நன்மை அடையவேண்டும் என்ற அன்பு அருள் உள்ளத்துடன் பலசமய நெறிகளைத் தந்துதவிய மங்கலச் செல்வி, மனோன்மணி, எவர்க்கும் எளிதில் அறிந்து உணர இயலாத அருமை உடையவள்.

சொல்லும், செயலும், சிந்தையும் ஒன்றாய் ஒரு முகமாய் இருக்கிற நிலையில் அறிவுக்குள் அறிவான மெய்ஞ்ஞான மேன்மையாய் விளங்குபவள் இவளே. (மார்க்கங்கள் - வழிகாட்டும் சமய நெறிகள். அரியாள் - அருமையானவள், மருவி- கலந்து. நுண்ணறிவு - அறிவிலும் கூர்த்த அறிவு - மெய்ஞான மேன்மை)

ஆருயிர்கள் முக்தியடைய எண்ணம் கொண்டு அன்னை சக்தி ஆறு வகையான சமயங்களைத் தோற்றுவித்தாள் (சௌரம், காணாபத்யம், கௌமாரம்,வைஷ்ணவம், சைவம், சாக்தம்). இவை ஆறிற்கும் இவளே தலைவி என்பதை அபிராமிபட்டர், ''சமயம் ஆறும் தலைவி இவளாய் இருப்பது..'' அபிராமி அந்தாதியில் வெகு அருமையாகக் கூறுகிறார்.

அன்னை சக்தி ''அகோசரி'' என்று திருமூலர் முன்னும் சொன்னார். அதாவது வாக்கினால் வர்ணிக்க முடியாதவள் மனதில் எண்ண முடியாதவள். மனம், வாக்கு, காயம் எல்லாம் ஒன்றுபட்ட நிலையில் மெய்ஞ்ஞானத்தால் மட்டுமே அறியக் கூடியவள் அன்னை சக்தி. இந்த ஞானத்தை தருபவளும் அவளே.

## 43. மனோன்மணி திருவடியே சரணம்

**பெற்றாள் பெருமை பெரிய மனோன்மணி**
**நற்றாள் இறைவனே நற்பயன் என்பர்**
**கற்றான் அறியும் கருத்தறி வார்கட்குப்**
**பொற்றாள் உலகம் புகல் தனியாமே. 1251**

சக்திகளில் எல்லாம் உயர்ந்தவள், பெருமை பெற்றவள் மகா சக்தி மனோன்மணி. நற்பலன்களை அருளும் அவள் திருவடித்துணையே, இறைவன் திருவடி நல்லருள் தரவல்ல சேவடி என்பர். கற்ற கல்வியின் பயன் உணர்ந்த திறம் அறிந்த நல்லறிவாளர்களுக்கு அன்னையின் பொன்னார் திருவடிகளே தஞ்சம் எனப் புகத் தக்க தனித்தன்மையான காப்பிடம் ஆகும்.

(கற்றான் - கற்றகல்வியினால் அறியும் கருத்து. பெற்ற அறிவு, அறிவார்-அறிந்த கல்வியாளர்கள். பொற்றாள்-பொன் போன்ற திருவடி, புகல் - தஞ்சம் என்றடையத்தக்க, தனியாமே - சரியான பாதுகாப்பான இடம் ஆகும்)

அன்னையின் திருவடிகளே தஞ்சம் அடைய வேண்டிய இடம் என்று திருமூலர் இப்பாடலால் அழுத்தந்திருத்தமாகச் சொல்கிறார். ஆதி சங்கரரும் ஸௌந்தர்ய லஹரியில் அன்னையின் திருவடிகளைப் போற்றிப் புகழ்கிறார். அனைத்து சாக்த அன்பர்களும், அருளாளர்களும் துதிப்பது அன்னையின் சேவடியே, அபிராமி பட்டர் ‘‘ அந்தரி பாதம் என் சென்னியதே’’ (அபிராமி அந்தாதி - 5) என்பார்.



## 44. உலக நாயகி மனோண்மணி

**அம்மனை அம்மை அரிவை மனோன்மணி**
**செம்மனை செய்து திருமங்கையாய் நிற்கும்**
**இம்மனை செய்த இருநில மங்கையும்**
**அம்மனை யாகி அமர்ந்து நின்றாளே. 1253**

அம்மனை - மோட்ச வீடு, உச்சித் தலை, சகஸ்ரதளம். இதன் தலைவி பெருமைக்குரிய பெண்ணரசி மனோன்மணி. அவள் உலகை, உள்ளத்தை தாய்மை செய்பவள், திருவாகிய செல்வத்தைத் தந்தருள நிற்பவள். அவளே எனக்கு இந்த உடம்பைத் தந்தவள். அவளே என்றும் தங்கி இருக்கிறாள்.

(செம்மனை - சிறந்த இடம், வீடு, நிலம் - உலகம் - அம்மனை - அழகிய இடம், உடம்பு, உள்ளம்)

திருமூலர் இப்பாடலில் ''எல்லாம் அவள் செயலே'' என்று சூட்சமமாகக் கூறுகிறார். அன்னை சக்தியே அகில உலகங்களையும் படைத்த உலகநாயகி. உலகங்களைப் படைத்து, பின் சீவர்களையும் படைத்து அவர்களுக்கு உடலையும் தந்து உதவினவள். அவ்வாறு படைத்த மனிதர்களின் உள்ளங்களிலும் அந்தர்யாமியாக இருப்பவள். உள்ளத்தில் இருந்து கொண்டு அதற்கு தூய்மை செய்து நல்ல சிந்தையை கொடுப்பவளும் அவளே. அவளை உணார்ந்தோர் உள்ளத்தில் நிரந்தரமாகவும் தங்கியும் இருப்பாள்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் 870. அந்தர்முக ஸமாராத்யா - உள் நோக்கு உள்ளவர்களால் நன்கு ஆராதிக்கக் கூடியவள்.

அன்னையே ஸ்ரீசக்ரமாக இருப்பவள். அவள் நம் உடலில் தங்கும்போது நம் உடலும் ஸ்ரீசக்ரமாகிவிடும். பாவனோபநிஷத்தும் இதைத்தான் உபதேசிக்கிறது. ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சரும் இம்முறையை பின்பற்றியவர். அவர், ''அமீ யந்த்ர, துமீ யந்த்ரீ'' என்று அன்னை பராசக்தியிடம் கூறுவார். அதாவது ''நான் யந்திரம் நீ யந்த்ரீ'' என்பதே.

# 45. அன்னையே திருமகளும் கலைமகளும் ஆனவள்

**நாவுக்கு நாயகி நன்மணி பூணாரம்**
**பூவுக்கு நாயகி பொன்முடி ஆடையாம்**
**பாவுக்கு நாயகி பாலொத்த வண்ணத்தாள்**
**ஆவுக்கு நாயகி அங்கமர்ந் தாளே. 1387**

நாவுக்கு-ஒலிக்கு முதல் பொருளான ஆதிசக்தி அணிமணி பூண்டவள். தாமரைப் பூவிலிருக்கும், செல்வத்துக்கு நாயகியான திருமகள், பொன்னாலான திருமுடி சூடியவள், பட்டாடை அணிந்தவள். பாட்டு மொழிக்கு நாயகியான கலைமகள். பால் போலும் வெண்ணிறம் கொண்டு விளங்குபவள். ஆன்மாக்களுக்கு - பசுவாகிய உயிர்களுக்குத் தலைவியான அன்னை பராசக்தியோ அன்பர் உள்ளமே கோவிலாகக் கொண்டு அங்கு அமர்ந்திருந்தாள். (நாவுக்கு நாயகி-வாக்கு தேவி. பா-பாட்டு, பேச்சு மொழி - ஆ-பசு, ஆவுக்கு - பசுவாகிய ஆன்மாக்களுக்கு)

அன்னை சக்தி உலகத்தை தோற்றுவித்து, உயிர்களையும் படைத்தவள். அவ்வுயிர்களுக்கு நல் அறிவும், உலகில் வாழ்வதற்குரிய செல்வத்தை தரும் சரஸ்வதி தேவியாகவும் லட்சுமி தேவியாகவும் இருந்து கொண்டு உதவி செயகிறாள். என்னே! அன்னையின் கருணை உள்ளம்!

இத்துடன் நில்லாது அன்னை அன்பர்களின் உள்ளங்களைக் கோவிலாகக் கொண்டு உறைகிறாள்.

இந்த கருத்தை ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் மிகுந்த காவ்யரசனையுடன் கூறுகிறது. 747 பக்த சித்த கேகி கனாகனா - பக்தர்களுடைய மனம் என்ற மயிலுக்கு ஆனந்தத்தைத் தரும் மேகக்கூட்டமாக இருப்பவள். 372. பக்த மானஸ ஹம்ஸிகா - பக்தர்களின் மனமாகிய ஏரியில் அன்னப்பறவைபோல் விளங்குபவள். 567. பக்த நிதி - பக்தர்களுக்குப் பொக்கிஷமாக இருப்பவள்.

## 46. அருள் பொழியும் காரணி

**அன்றிரு கையில் அளந்த பொருள்முறை**
**இன்று இரு கையில் எடுத்தவெண் குண்டிகை**
**மன்றது காணும் வழிஅது வாகவே**
**கண்டுஅங்கு இருந்தவர் காரணி காணுமே. 1388**

அன்று - உலகைப் படைக்கத் தொடங்கிய அந்த நாளில் அன்னை பராக்தி தனது திருக்கரங்களால் ஆருயிர்களுக்குப் புவன போகங்களை அருளிச்செய்தாள். உயிர்கள் அவற்றில் திளைக்க அருள் செய்தாள். இன்றவள் தன் திருக்கரங்களில் கொண்டிருக்கிற படிகமாலையும், சுவடியும் உயிர்களுக்கு மெய்யறிவு உணர்த்தி, அவைகளை இறை உணர்வு பெற வழி செய்யும் திருக்கோலம் ஆகும்

இந்த அருட்காட்சியை - இக்கோலத்தை உள்ளத்துள்ளே கண்டு வழிபடக் காரணமாகவும் கர்த்தாவாகவும் அவளைக் கண்டு அருள் பெறுதல் வேண்டும்.

(வெண் குண்டிகை - படிகமாலை, கமண்டலம் அல்லது கூவடி - மன்று - ஞானவெளி. காரணி - காரணத்துக்குக் கர்த்தா.

போகங்களைத் தந்த அன்னை பராசக்தியை ஞானத்தைத் தரும் மெய்பொருளாக நாம் உணர வேண்டும் என்பதை இப்பாடலின் மூலமாக உலகோர்க்கு அறிவிக்கிறார் திருமூலர். ஸ்ரீலலிதா ஸஹஸ்ராமம் 764. ஸ்வர்காபவர்கதா - ஸ்வர்க்கத்தையும், மோட்சத்தையும் தருபவள். அதாவது போகத்தையும், முக்தியையும் தருபவள் அன்னேயே. முன்னது அழியக்கூடியது. முத்திநிலை என்பது நிரந்தரமான அழிவில்லாத ஆனந்தம் (சுகம்). அபிராமிபட்டர், ''அழியாமுத்தி ஆனந்தமே'' (அபிராமி அந்தாதி-10) என்று கூறுவார்.

இதன் கருத்து யாதெனில் இம்மையில் இம்மண்ணுலகில் போகங்களுடன் வாழ்ந்து மறுமையில் வீடு பேறு அடையலாம் என்பதேயாகும்.

## 47. வேத முதல்வி வித்தகி

**ஆலிக்குங் கன்னி அரிவை மனோன்மணி**
**பாலித்து உலகில் பரந்துபெண் ஆகும்**
**வேலைத் தலைவியை வேத முதல்வியை**
**பாலித்து ஒருவன் உகந்துநின் றானே. 1161**

உயிர்களுக்கு இன்ப அன்பினைத் தந்து மகிழ்வூட்டும் சிறந்த பெண்ணரசி மனோன்மணி. உலக உயிர்கள் அனைத்தையும் பாதுகாப்பவள், அவைகளுக்கு பரிவு காட்டுபவள். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளுதல் என்ற ஐந்தொழில்களுக்கும் அரசியாக விளங்கும் அன்னை, வேதங்களின் தலைவி ஆனவள். அப்பேர்ப்பட்ட தலைவியைத் தன் இடமாகக் கொண்டு பரம்பொருள் உயர்ந்து சிறந்து விளங்கினான்.

(பாலித்து - அருள் செய்து பாதுகாத்து. பரந்து- பாதுகாவலாய் இருந்து. உகந்து -உயர்ந்து மகிழ்ந்து)

பரம்பொருளாகிய சிவபெருமான் அன்னை சக்தியை தனது இடப்பாகத்தில் கொண்டு உயர்ந்து விளங்கினான் என்று திருமூலர் கூறுவதிலிருந்து அன்னைக்கு முதலிடத்தை அளிக்கிறார் என்பது உள்ளங்கை நெல்லிக் கனிபோல விளங்குகிறதல்லவா! அன்னையை ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தில் ''ஸ்ரீமாதா'' என்று வாக்தேவிகள் அழைக்கிறார்கள். 'ஸ்ரீ' என்பதற்கு வேதம் என்றொரு பொருள் உண்டு. எனவே அன்னை வேதமாதா - வேதத்தைப் படைத்தவள். அதிலேயே, 338. வேத ஜனனீ - வேதங்களை உண்டு பண்ணினவள். 335.வேதவேத்யா - வேதங்களால் அறியத்தக்கவள்.

அன்னை சத்தியே எல்லாவற்றிற்கும் மேலானவள் என்பது இப்பாடலின் கருத்து ''அவளின்றி அணுவும் அசையாது''

## 48. ஆறு ஆதாரங்களில் அன்னை

**நாலிதழ் ஆறில் அவிர்ந்தது தொண்ணூறு**
**தானிதழ் ஆனவை நாற்பத்து நாலுள**
**பாலிதழ் ஆனவள் பங்கய மூலமாய்த்**
**தானிதழ் ஆகித் தரித்திருந்தாளே. 1155**

நாலிதழ் - நான்கு இதழ்களுடைய மூலாதாரம். ஆறில் - ஆறு இதழ்கள் கொண்ட கொப்பூழ் தொண்ணூறு - தொண்ணூறு இதழ்கள் கொண்டமேல் வயிறுதானிதழ் - நாற்பது இதழுடைய நெஞ்சம். பதினான்கு இதழுடைய கழுத்து, பத்திதழ் - புருவ நடு. (மூலாதாரம் ஆக்ஞை இரண்டுக்கும் இடையே தொண்ணூறு நரம்புகள் இயங்குகின்றன. இந்த இரண்டு ஆதாரங்களுக்கும் இடையே சுவாதிட்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுக்தி என்னும் நான்கு நிலைகளிலும் 6+10+12+16 = 44 இதழ்கள்).

பாலிதழ் ஆகி - ஆண் பெண் ஆகிய இருபாலும் ஆகி ஆக்ஞா சக்கரத்தில் விளங்கும் சக்தி பிற ஆதாரங்களில் இருந்து அருளுவாள்.

(பங்கயம் - தாமரை) ஆறு ஆதாரங்கள் : மனித உடலில் சூட்சமாக ஆறு ஆதாரங்கள் உள்ளன. மேருதண்டம் என்று சொல்லப்படும் முதுகு நடு எலும்பினுள் சுழுமுனை என்ற நாடி உள்ளது. அதன் அடியிலிருந்து மூலாதாரம் (குதம், குய்யம் இரண்டின் நடுவில் உள்ளது.) ஸ்வாதிட்டானம் (லிங்கத்தின் மூலப்ப்ரதேசம்) மணிபூரகம்(நாபி), அநாஹதம் (இருதயம்), விசுக்தி (கழுத்து), ஆக்ஞை (புருவநடு) என்று ஆறு நிலைகள் அல்லது ஆதாரங்கள் உள்ளன. இந்த ஆறு ஆதாரங்களுக்கும் மேலே ஸஹஸ்ரார சக்கரம் உள்ளது. இங்கு ஆயிரம் இதழ் பொற்றாமரை உள்ளது)

எல்லா ஆதாரங்களிலும் அன்னை இருந்து கொண்டு அன்பர்கருக்கு அருள் புரிகிறாள் என்பதே இப்பாடலின் கருத்து.

## 49. ஒரு சக்தி நவ சக்தியாக

**திரிபுரை சுந்தரி அந்தரி சிந்துரப்**
**பரிபுரை நாரணி யாம்பல வன்னத்தி**
**இருள்புரை ஈசி மனோன்மனி என்ன**
**வருபல வாய்நிற்கு மாமாது தானே. 1046**

சூரியன், சந்திரன், அக்கினி என்று மூன்று கூறாக உள்ள 'திரிபுரை', சுந்தரி -(அழகானவள்), ஆகாய வடிவானவள் (அந்தரி), உலகத்தை, உயிர்களைப் பரிவுடன் காக்கும் சிவந்த நிறம் கொண்ட 'பரிபுரை', துர்க்கை (நாரணி), பலவான நிறமுடையவள் (அம்பலவன்னத்தி), கரிய நிறமுடைய மகேசனுக்கு சக்தியாக விளங்கும் ஈசுவரி', நினைப்பவர் மனத்துள் நின்றளூரும் சதாசிவ சக்தியான மனோன்மணி' என்று நவசக்தியாக விளங்குபவள், ஓர் உருவான அன்னை பராசக்தியே. திரிபுரை - மூன்று கூறு. சுந்தரி - அழகி, அந்தரி-ஆகாயத்தில் இருப்பவள். சிந்தூரம் - செந்நிறப்பொடி, பரிபுரை - பரிவுகாட்டும். நாரணி - துர்க்கை, பல - பல வண்ணம், பல நிறம், மாமாது -பராசக்தி - ஒன்பது சக்திகளாகவும் திகழ்பவள்.

அன்னையை இங்கு திருமூலர் பலவிதமான வண்ணங்களிலும், வடிவங்களிலும் பலவிதமான குணங்களுடனும் காண்கிறார். திரிபுரை என்ற சொல்லுக்குப் பல பொருள்கள் உண்டு, அவை எண்ணில் அடங்கா. திருமூலர் இங்கு வெகு அழகாக, பொருத்தமாக, ''மாமாது'' என்று அன்னையை அழைக்கிறார். எல்லா உலகங்களிலும் சிறந்ததாக, எல்லாவற்றிற்கும் மேலாக விளங்குபவள் அன்னை ஆதிபராசக்தி.



## 50.செல்வமும்ஞானமும்முத்தியும்அளிப்பவள்

**தானா அமைந்தவம் முப்புரந் தன்னிடைத்**
**தானான மூவுரு ஓர் உருத் தன்மையுள்**
**தானான பொன்செம்மை வெண்ணிறத் தாள்கல்வி**
**தானான போகமும் முத்தியும் நல்குமே. 1047**

தானாக அமைந்தவம் முப்புரந் தன்னிடை - முப்புரம் என்பது ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்கள். இவை முறையே பொன், வெள்ளி, இரும்பாலனவை என்றும் கூறுவர் இவற்றின் நிறம் செம்மை, வெண்மை, கருமை. இவை முறையே தலைக்குணம், இடைக்குணம் கடைக்குணம் என்றும் கூறப்படும். இவை இயல்பாக உயிர்களிடையே பொருந்தி உள்ளன. இந்த முப்புரமாகவும்.

தானான மூவுரு ஓர் உருத்தன்மையள் - பொன், வெள்ளி இரும்பு அதாவது செம்மை, வெண்மை, கருமை ஆகியற்றைக் குறிக்கும். அலைமகள் (இலட்சுமி - பொன்னிறம்) கலைமகள் சரசுவதி-வெண்ணிறம்) உமையவள் பார்வதி - கருநிறம்) ஆகிய மூவரும் ஒன்றாக; தானான கல்வி, போகமும், முத்தியும் நல்குமே- இருக்கின்ற சக்தியே, தானே கல்வியும், செல்வமும், பேரின்ப வீடும் அருளுபவளாகவும் உள்ளாள்.

சிவபெருமானின் திரிபுர தகனமும் இங்கு நோக்கத் தக்கது. அவர் எரித்த கோட்டைகள் ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களைக் குறிக்கும். பரஞானம் அடையப் பெறுபவர்கள் யாவரும் எக்காலத்திலும் திரிபுர தகனம் செய்து வருகிறார்கள்,

''த்ரிபுரம்'' (முப்புரம்) என்பது அன்னையின் பீஜாக்ஷரங்களாகிய 'ஐம் - க்லீம் சௌ: ஆகியவற்றைக் குறிக்கும். (குரு மூலமாகவே தான் அறியவேண்டும்). மனமாகிய மத்தால் இதைக் கடைந்து பரமசிவன் பராசக்தியை அடைந்தமையால் அவருக்கு 'புரமதனன் ' என்று பெயர். திரிபுராந்தகன் என்றும் சொல்வர்.

## 51. அன்னை சக்தி வாராகியாக !

**ஆன வராக முகத்தி பதத்தினள்**
**ஈன வராகம் இடிக்கும் முசலத்தோடு**
**ஏனை மழுபடை ஏந்திய வெண்ணகை**
**ஊன மறஉணர்ந் தாரஉளத்து ஓங்குமே.**

ஆன வராக முகத்தி-தேவி பராசக்தியைச் சார்ந்திருக்கும் சப்த ஏழு கன்னியரில் ஒருத்தி வராக முகத்தை (வராகம்-பன்றி) உடையவன். வராகி எனப்படுபவள்.

ஈனவர் ஆகம் இடிக்கும் முசலத்தோடு இவள் இழிந்தவர்களின் உடலை அடித்து வருத்தும் இரும்பு உலக்கையும், மற்ற மழு (கலப்பை) போன்ற ஆயுதங்களையும் ஏந்திய வெள்ளி நகையும் (வெண்ணகை) உடையவள்.

இவள் குறையொன்றுமில்லாமல் தன்னைக் கும்பிட்டு வணங்குவர் உள்ளத்தே எழுந்தருளியிருப்பாள். (ஈனவர் - இழிந்தவர், ஆகம் - உடம்பு, முசலம் -உலக்கை -ஊனமற - குறையின்றி).

பன்றி முகமுடைய ‘வராகி’ என்ற சக்தியாக இருப்பவள். திருமாலும் பூவராக அவதாரம் எடுத்து நீரில் முழ்கிய பூமியை மீட்டுக் கரையேற்றினார். விஷ்ணுவும், சக்தியும் அபேதம், பண்டாசுரனுடன் போரிடச் சென்றபொழுது, தேவியின் அம்சமாகத் தோன்றி, சேனைத் தலைவியாக உடன் சென்றவள் வராகி. காட்டுப் பன்றிகள் இழுத்துச் சென்ற தேரில் ஏறிச் சென்று பண்டாசுரனின் தம்பி விசுக்கிரனை அழித்தாள். வராசக்தி வராகாணந்த நாதர் என்பவருக்கு வராகத் திருமுகத்துடன் தரிசனம் தந்தமையின் வராகி என்னும் பெயர் பெற்றாள்’’ என்று திரிபுரா சித்தாந்தம் என்னும் நூல் கூறுகிறது. வராகி மாலை என்ற தமிழ்ச் செய்யுள் நூல் இவளைப் பற்றியது என்பது குறிப்பிடத்தக்கது.

## 52. அன்னை சக்தி வயிரவியாக

**ஆகின்ற மூவரும் அங்கே அடங்குவர்**
**போகின்ற பூதம் பொருந்து புராதரர்**
**சார்கின்ற சார்வுழிச் சாரார் சதிர்பெறப்**
**போகுந் திரிபுரை புண்ணியத் தோரே 1077**

வயிரவி சக்தி வல்லமைக்குப் பிரமன், திருமால் உருத்திரன் ஆகிய மூவரும் அடங்குவர். அழியக் கூடிய ஐம்பூதச் சேர்க்கையான உடம்பைப் பெற்றுள்ள உயிர்கள், தங்கள் நிலையாமையை உணர்ந்து, பிறந்திருக்கும் உலகியலைச் சாராது, (சார்கின்ற வழிசாரார்) அன்னை வயிரவியின் திருவடிகளைச் சார்வோர், புண்ணியப் பலன்கள் பெற்றவராவார்கள். (போகின்ற பூதம் - அழியும் ஐம்பூதம் - நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் முதலியன புராதரர் - உயிர்கள். சார்கின்ற-சார்ந்திருக்கின்ற, சார்வழி - செல்லும் வழி. சாரார்-சேராதவர்கள் சதிர் - ஆற்றல்)

உயிர் உடலைவிட்டு பிரியும் போது ஐம்பூதங்களும், தத்துவங்களும் சென்று விடும். அவை மற்றொரு பிறவியில் எடுக்கும் உடலைத் தேடிச் செல்லும். எனவே இவ்வுடல் நிலையாதது என்பதை இவ்வுலகில் பிறந்த சீவர்கள் உணர்ந்து அன்னையின் திருவடிகளை சதா சர்வ காலமும் ப்ரார்த்திக்க வேண்டும். இங்ஙனம் செய்தால் சீவர்கள் மீண்டும், மீண்டும் பிறப்பதையொழித்து பிறவாநிலையை அடையமுடியும். அபிராமி பட்டரும் அபிராமி அந்தாதியில் (77) அன்னையை ''ஒளிருங் கலா வயிரவி..'' என்று போற்றிப் புகழ்கிறார். அதாவது ஒளிவிட்டு பிரகாசிக்கின்ற கலைகளையே வைர ஆபரணமாகக் கொண்டவள் - அன்னை என்று பொருள். பரஞ்சோதி முனிவர், திருவிளையாடல் புராணத்தில் (4:34) ''மெய்ம் மறையார் கலையனைத்தும் மேகலையா மருங்கசைத்த - விமலையம்மா.'' என்கிறார்.

## 53. கலைகளின் நாயகி வயிரவி



**பூரித்த பூவிதழ் எட்டினுக்குள்ளேயோர்**
**ஆரியத் தாளுண்டங்கு எண்மர் கன்னியர்**
**பாரித்த பெண்கள் அறுபத்து நால்வருந்**
**சாரித்துச் சக்தியைத் தாம் கண்டார்களே. 1084**

விரிந்து மலர்ந்த தாமரை மலர்களின் எட்டு இதழ்களுக்கும் உள்ளே, அதன் நடுவில் தண்டு ஒன்று உள்ளது. அங்கே எட்டு கன்னிப்பெண்கள் உள்ளனர். அவர்கள் ஒவ்வொருவருக்கும் எட்டு என்ற கணக்கில் அறுபத்து நான்கு கலைச் செல்விகள் உள்ளனர். இந்து அறுபத்து நான்கு கலைச் செல்விகளும் அன்னை வயிரவியைச் சார்ந்து நிற்கின்றார்கள், (பூரித்த-மலர்ந்த, ஆரியத்தாள் - நடுத்தண்டு, மனோன்மணி என்று கூறுவர். பாரித்த-சார்ந்த சாரித்து - சூழ்ந்து).

அறுபத்து நான்கு கலைகள்: (மொழிகள்) - 1. அறிதல் 2. எழுதுதல் 3.படித்தல், 4. மொழியியல் அறிவு 5. கவிதை இயற்றுதல். 6.கற்றதை நினைவு கொள்ளுதல். (வேதங்கள்) 7. ரிக் 8.யஜுர் 9. சாம. 10. அதர்வண (உபவேதங்கள்) -

11.காந்தர்வம் 12. ஆயுர்வேதம் 13.தனுர் வேதம் (விற் பயிற்சி) 14. அர்த்த சாஸ்திரம் (பொருளாதாரம்) (ஆறு சாஸ்திரங்கள்) 15. நியாயம் 16.வைசேஷிகம் 17. சாங்கியம் 18.யோகம் 19.மீமாம்சம். 20.வேதாந்தம். (வேதாங்கங்கள்) வேதத்தின் உறுப்புகள் - 21.சிக்ஷா. 22.வியாகர்ணம் 23. சந்தஸ் 24.நிருத்தம் 25.சோதிடம் 26. கல்பம் 27. தந்த்ர-புராண இதிகாச ஸ்மிருதிகள் 28. காவியம் - நாடகம் - அலங்காரம் 29. தேர்ப்படை 30.யானைப் படை 31.குதிரைப் படை 32. காலாட் படை, 33. சாமுத்ரிகா சாஸ்திரம். 34. மல்வித்தை 35.சமையற்கலை 36.காருடம்-விஷ மருத்துவம் 37.சிற்பம் 38. சித்திரம் (ஓவியம்) 39. காற்று வாத்தியம் (துளைக்கருவி) 40.உலோக வாத்யம் 41. நரம்பு வாத்யம். 42.தோல் வாத்யம் 43. வாய்பாட்டு, 44. நடனம்-பரதக்கலை. 45. இந்திரஜாலம் 46. சூதாட்டம் 47. திருட்டு(களவு) 48. கண் கட்டு வித்தை 49. ரத்ன பரிட்சை (மணிகளை அறிதல்) 50.தாது பரிட்சை (கனிம வளம் காணுதல்) 51. ரஸவாதம் (வேதியல்) 52. சாந்தி (மன அமைதி அளிக்கும் கலை) 53. வசியம். 54. பூத பைசாசங்களை விரட்டுதல். 55. வித்வேஷணம் (அரசியல் நண்பனைப் பகைவனாக்குதல்) 56. ஆகாச கமனம் 57.ககனப் பிரவேசம். 58. கதிஸ்தம்பம் (நடையை முடக்குதல்). 59. ஜலஸ்தம்பம் (நீரில் நடத்தல்) 60. விருஷ்டிஸ்தம்பம் (மழையை நிறுத்துதல்) 61. அக்னிஸ்தம்பம் (தீயை சுடாமல் செய்தல்) 62. அசைவை நிறுத்துதல் 63. ஆயுதஸ்தம்பம் (படைக்கலன்களை நிறுத்துதல்) 64.ரேதஸ்தம்பம் (குடும்பக் கட்டுப்பாடு-இயற்கை முறை).



## 54. வயிரவி மந்திரம்

**பன்னிரண் டாம்கலை ஆதி பயிரவி**
**தன்னில் அகாரமு மாயையுங் கற்பித்துப்**
**பன்னிரண்டா தியோடு அந்தம் பதினாலும்**
**சொன்னிலை சோடச மந்திரமென்று ஓதிடே**
**1075**

பன்னிரண்டாம் கலை ஆதி பயிரவி - ஆதி பயிரவியின் கலைகள் பன்னிரண்டு, தன்னில் அகாரமும் மாயையும் கற்பித்து - அதனோடு அகர கலையும், மாயையின் கலையும் கூட்டிச் சேர்க்க பதினான்காகும். இந்த பதினான்கும், ஆதியோடு அந்த பதினான்கும் - 'ஓம்' 'ஐம்' என்னும் சொல் நிலையாகவுள்ள பதினாறு கலைகளும் அம்மை அருளுமிடம் என்றெண்ணி மந்திரம் ஓதுவாயாக.

(சோடசம் - பதினாறு வயிரவிக்கடவுளின் சக்தி மந்திரம் - வயிரவி மந்திரம்)

திருமூலர் அன்னை சக்தியை வயிரவியாகக் கண்டு அவளைப் போற்றுபவர்களைச் சொல்ல, இப்பாடலில் வயிரவி மந்திரத்தையும் உலகோர்கு உரைக்கிறார். (உபதேசிக்கிறார்)

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் - 276. பைரவீ - பைரவருடைய சக்தியானவள். பன்னிரண்டு வயதான கன்னிகையாகப் பூஜிக்கப்படுபவள் --'பைரவீ' என்ற நாமம் தமிழில் 'வயிரவி' என்று கூறுவார்.



## 55. சிவனுக்கு அருளும் வயிரவி

**நின்ற வயிரவி நீலி நிசாசரி**
**ஒன்றும் இரண்டும் ஒருங்கிய உள்ளத்துச்**
**சென்றருள் நாயகி தேவர் பிரானுக்கே**
**நன்றருள் ஞாலத்து நாடிடுஞ் சாற்றியே. 1097**

நிலைபெற்ற வயிரவி நீல நிறத்தவள். நள்ளிரவில் நடமாடுபவள். இராசத, தாமச, சாத்விகம் ஆகிய முக்குணங்களும் அடங்கி ஒடுங்கி அவிந்தவர் உள்ளத்துள் விரும்பிச் சென்று தங்கியிருக்கும் தயாபரி, தேவ தேவனாகிய சிவப் பரம்பொருளுக்கு நல்லருள் புரிபவள். எனவே உலக மக்களாகிய நீங்களும் அவளைப் போற்றித் துதித்து நல்லருள் பெறுக. (நிசாசரி-நிசி+சரி நிசி-இரவு, சரி-சஞ்சரிப்பவள், ஒன்றும் இரண்டும் - மூன்று குணங்கள் - முக்குணங்கள் ஞாலம் -உலகம். சாற்றி-போற்றி)

இப்பாடலில் திருமூலர், சிவபெருமானும் அன்னை சக்தியை துதித்து நல்லருள் பெறுகிறார் என்று சொல்வது அன்னைதான் மேலான தெய்வம் என்பதை அருமையாக விளக்குகிறது. இக்கருத்தினை ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமமும் ஆதரிக்கிறது. 231 மஹாபைரவ பூஜிதா : காபைரவரால் பூஜிக்கப்பட்டவள், பத்மபுராணமும் இதைச் சொல்கிறது.

தேவர்களுக்கெல்லாம் தேவனாகிய சிவபெருமான் அன்னையைத் துதிக்கும் போது உலக மக்கள் அவளைக் கட்டாயம் துதித்து நல்லருள் பெற்று முக்தி பெறவேண்டும் என்பதே திருமூலர் உலகோர்க்கு செய்யும் உபதேசம்.



## 56. சொல்லரிய சோதி வயிரவி

**ஆதி வயிரவி கன்னித் துறைமன்னி**
**ஓதி யுணரில் உடலுயிர் ஈசனாம்**
**பேதை உலகிற் பிறவிகள் நாசமாம்**
**ஓத உலவாத கோலமொன்றாகுமே. 1099**

ஆதி முதல்வியாகிய வயிரவி உலகங்களை எல்லாம் ஈன்றெடுத்தவள். அப்படியிருப்பினும் என்றும் கன்னியாக இருப்பவள். அவளை ஓதி உணர்ந்து பாடித் துதித்து வழிபடும் சீவன்கள் சிவத்தன்மை பெறும். அதன் மூலம் அறியாமை இருள் மண்டிக் கிடக்கும் உலகில் பிறந்து இறக்கும் பிறவித் துயர் போயொழியும். சொல்லி விளக்கமுடியாத ஒளிவடிவத்திருமேனி கொண்ட அவள். ஓதி உணர்வார்க்கும் ஒப்பற்ற ஒளி உடலை அருளுவாள். (துறை - இடம். மன்னி- பொருந்தி, ஓதி- துதித்து. ஈசானம் - வடகிழக்கு திசை, சகஸ்ர தளம் என்பர்)

அபிராமிபட்டரும் அபிராமி அந்தாதியில் (8), ''நீலி, அழியாத கன்னிகை..'' என்று அன்னையை வர்ணிக்கிறார். திருமூலரும் பின்னர் (பாடல்-1118) ''கன்னியுங்கன்னி அழிந்திலள் காதலி'' என்பார். தாயுமானவர், ''அகிலாண்ட கோடியீன்ற அன்னையே பின்னையும் கன்னியென மறைபேசும் ஆனந்த ரூபமயிலே'' என்பார். ''பவன் பிரமசாரி ஆகும், பாகுமொழி கன்னியாகும்'' (சிவஞான சித்தியார்.)

அன்னை 'போராளியாக' இருப்பதைச் சொல்வது ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் 806 -வது நாமம் ''பரஞ்ஜ்யோதி'', 40. சிவபரா - தன் பக்தர்களுக்கு சிவனைக் காண்பிப் பவள்.



## 57. அழியாத கன்னிகை அன்னை

**கன்னியுங் கன்னி அழிந்தலள் காதலி**
**துன்னியங் கைவரப் பெற்றனள் தூய்மொழி**
**பன்னிய நன்னூற் பகைவரும் அங்குள**
**என்னே! இம் மாயை இருளது தானே. 1118**

என்றும் இளமை மாறாதிருக்கின்ற இறைவி பரம்பொருளின் துணைவி, சிவத்தோடு பொருந்தி ஐவரை பெற்றுள்ளாள். என்றாலும் கன்னித்தன்மை மாறாதிருப்பதே அவளின் சிறப்பாகும். நாதவடிவான நாயகி அவளே. வேதங்கள் போற்றிப் புகழும் பரம்பொருளாகிய சிவப் பரம்பொருளும் அங்கே தங்கியிருக்கிறாள். இருந்தும் மாயாசக்தியான இவளைச் சூழ்ந்து இருளும் இருக்கிறது. இது வியப்பாய் உள்ளதல்லவா!

(துன்னிய - பொருந்திய, ஐவர் - பிரமன், திருமால், உருத்திரன், மகேச்வரன், சதாசிவன், தூய்மொழி - தூயமொழி, வேதம் - மந்திரச்சொல், பன்னிய- போற்றிப் புகழ்கிற, நன்னூல் - வேதம், பகவன் - பரமசிவன், என்னே - வியப்புச் சொல்! மாயை - அறியாமையாகிய இருள் அகத்துள் இருப்பதைக் குறித்தது)

சென்ற பாடலிலும் அன்னையை என்றும் கன்னியாக இருப்பதைக் கண்டோம். அன்னைக்கு பிறப்பு, இறப்பு இல்லை, அன்னை என்றுமே கன்னியாக இருக்கும் தன்மையை யாரும் அறிந்துணர இயலாது. அபிராமி பட்டர் இக்கருத்தினை அபிராமி அந்தாதியில் (93) ''மிகையே இவர் தன் தகைமையை நாடி விரும்புவதே'' என்று வெகு அருமைச்யாகச் சொல்கிறார். ஸ்ரீதுர்கா காயத்திரியிலும்,

''காத்யாய நாய வித்மஹே, கன்ய குமாரி தீமஹி
தன்னோ துர்க்கிப் பிரசோதயாத்''

என்று வருவது காண்க. அதாவது கன்னியாகவும், குமாரியாகவும் உள்ளவள் துர்கா என்கிறது.

## 58. அன்னையே துர்கா தேவி

**எய்திட லாகும் இருவினையின் பயன்**
**கொய்தளிர் மேனிக்குமரி குலாங்கன்னி**
**மைதவழ் கண்ணிநன் மாரிதுர்க்கையொடு**
**கைதவம் இன்றி கருத்துறும் வாறே. 1204**

அன்னையின் வழிபாட்டால் மேலான நற்பயன்கள் அடையப் பெறலாம். கொழுந்து மாந்தளிர் போன்ற (கொய்தளிர்) அழகிய திருமேனி வனப்பும் இளமையும் அழகும் பொருந்திய பெண்ணரசியை (குலாம் கன்னி) அருள் ஒழுகும் கண்ணுடைய, இன்பம் அருளுகின்ற இயல்புடையவளை, மாரியை, துர்க்கையை வஞ்சனை இல்லாமல் வழிபாடு செய்து கொள்க

(இருவினையின் பயன் - இங்கு மேலான வினையின் பயன் எனக் கொள்க. கைதவம் இன்றி - வஞ்சனையில்லாமல், கருத்துறல் - மனதில் இருத்தி வழிபடுதல்)

திருமூலர் இப்பாடலில் அன்னை சக்தியை துர்காதேவியாக காணுகிறார். ''துர்க்கையத் துதிப்போர்க்கு துன்பமில்லை'' என்பது சான்றோர் வாக்கு, அருளைத்தரும் கண்கள் கொண்டு இன்ப மழை பொழிகிறாள் துர்கா தேவி. (துர்காதேவியை துதிக்கும் முன் வராகி தேவியை துதிக்க வேண்டும்.) ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் - 190. துர்கா - துர்கை என்ற பெயருடையவள் கன்யா பூஜையில் ஒன்பது வயதுப் பெண் துர்கை எனப்படுபவள்.

191. து:கஹந்த்ரீ - துக்கத்தைப் போக்குபவள் 192. ஸுகப்ரதா - சுகத்தைத் தருபவள், தேவீ மஹாத்மியம் (11.24)

'ஸர்வ ஸ்வரூபே ஸர்வேசே ஸர்வசக்தி - ஸமன்விதே

பயேப்யஸ் த்ராஹிநோ தேவி துர்கே தேவி நமோஸ்துதே'' என்கிறது. இதன் பொருள் அனைத்து வடிவமாகவும் விளங்குபவளே அனைத்தையும் - ஆள்பவளே! அனைத்து சக்தியும் பொருந்தியவளே! பயங்கரமான சூழ்நிலைகளிலிருந்து எங்களைக் காப்பாற்றி வரும் துர்கா தேவியே உனக்கு நமஸ்காரம்

## 59. தேவ தேவர் தொழும் தேவி

**ஆமயன் மால்அரன் ஈசன் சதாசிவன்**
**தாமடி சூழநின்று எய்தினார் தம்பதம்**
**காமனுஞ் சாமன் இரவி கனலுடன்**
**சோமனும் வந்தடி சூடநின் றாளே. 1208**

படைக்கும் தொழிலைச் செய்கின்ற பிரமன் (ஆம் அயன்) காக்கும் தொழிலைச் செய்யும் திருமால், அழிக்கும் தொழில் செய்யும் அரன் மறைக்கும் தொழிலைச் செய்யும் மகேஸ்வரன், அருள் செய்யும் சதாசிவன் ஆகிய ஐவரும் இறைவியின் தாமரைத் திருவடி சூழ நின்று திருவருள் பெற்றுத் தம் பதவிக்கான செயல்களை மேற்கொள்ளும் ஆற்றல் பெற்றனர். (தம் பதம் எய்தினர்) காமவேளும் (காமனும்) அவன் தம்பியாகிய சாமனும், சூரியனும் (இரவி) அக்கினி தேவனும் (கனலுடன்)சந்திரன் (சோமனும்) அன்னையின் திருவருள் பெற்றே தம் நிலை எய்தப் பெற்றனர்.

விண்ணுலகில் உள்ள அனைத்து தேவாதிதேவர்க்கும் அன்னையின் தாமரைத் திருவடியைப் பற்றி போற்றிப் பணிந்து தங்களுடைய பதவிகளைப் பெற்றார்கள். மண்ணுலகில் உள்ள மனிதர்களும் அவ்வாறு அன்னை ஆதிபராசக்தியைத் தொழுது முக்தியடைய வேண்டும் என்று சொல்லாமற் சொல்கிறார் திருமூலர். அபிராமி பட்டர் அபிராமி அந்தாதியில் (97) ''ஆதித்தன், அம்புலி, அங்கி..... - கணபதி, காமன் முதல் சாதித்த புண்ணியர் எண்ணிலர் போற்றுவார் தையலையே'' என்று கூறுவதும் காண்க

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம். 369. பரதேவதா-உபாஸிக்க வேண்டிய, எல்லோருக்கும் மேற்பட்ட சிறந்த ஈஸ்வர -ஸ்வரூபமாக இருக்கிறாள் அன்னை. 406. சிவாராத்யா-சிவனால் வழிபடப் பெற்றவள். 83. ப்ரஹ்மோபேந்தர மஹேந்ராதி தேவஸம்ஸ்த வைபவா-ப்ரஹ்மா, விஷ்ணு, இந்திரன் முதலிய தேவர்களால் துதிக்கப்பட்ட பெருமையுள்ளவள்.

## 60. அன்னையின் இருப்பிடம் இதயத் தாமரை

**அடுக்குந் தாமரை ஆதி இருப்பிடம்**
**எடுக்குந் தாமரை இல்லகத்துள்ளது**
**மடுக்குந் தாமரை மத்தகச் தேசெல**
**முடுக்குந் தாமரை முச்சதுரத்தே. 1144**

ஆதியாகிய பராசக்தி இருக்கும் இடம் மனமாகிய தாமரை. இதன் உயிர்ப்புச் சக்தி உள்ள இடம் கழுத்துப் பகுதியாகும். மடுக்கும் தாமரைநெற்றிப் புருவ நடு ஆகும். இதை மேலும் செலுத்தும் சக்தி முக்கோண மூலாதாரமாகும்.

(அடுக்குந் தாமரை - ஆஞ்ஞை. எடுக்கும் தாமரை - விசுத்தி. மடுக்கும் தாமரை - அனாஹதம் முடுக்கும் தாமரை - மணிபூரகம் இல்லகம் கழுத்து, மத்தகம் - யானை போன்ற நெற்றி - புருவ நடு)

இப்பாடலில் திருமூலர் அன்னை சக்தியை தாமரை மலர்களால் ஒரு அர்ச்சனையே செய்து விடுகிறார். மலர்களில் சிறந்தது தாமரை. அதனால் தானே அன்னை தாமரை மலர் மீது எழுந்தருளியுள்ளாள். ‘பத்மாஸனா’ என்ற பெயரும் இதைக் குறிப்பது (பத்மம்- தாமரை, ஆசனம் - இருப்பிடம்)

அபிராமிபட்டரும், அபிராமி அந்தாதியில் (58) ‘‘அருணாம் புயத்தும்....’’ என்றும் துவங்கும் பாடலில் ஒரு தாமரைக் காட்டினையே உருவாக்கி விடுகிறார்

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் அன்னன, சக்தி மூலாதாரத்தில் நான்கு இதழ்கள் கொண்ட தாமரையாலும், ஸ்வாதிஷ்டானத்தில் ஐந்து இதழ்கள் தாமரையாலும், மணிபூரகத்தில் பத்து இதழ்கள் கொண்ட தாமரையிலும், அனாஹதத்தில் பன்னிரெண்டு இதழ்கள் கொண்ட தாமரையிலும், விசுக்த்தியில் பதினாறு இதழ்கள் கொண்ட தாமரையிலும், ஆக்ஞையில் இரண்டு இதழ்கள் கொண்ட தாமரையிலும் ஸஹஸ்ராரத்தில் ஆயிரம் இதழ்கள் கொண்ட தாமரையிலும் வீற்றிருப்பதாக கூறுகிறது.

## 61. பஞ்ச பூதமாகி நின்றாள் அன்னை

**முன்னிக்கு ஒருமகன் மூர்த்திக்கு இருவர்**
**வன்னிக்கு மூவர் வதுவைக்கு நால்வர்**
**கன்னிக்கு பிள்ளைகள் ஐவர் முனாளில்லை**
**கன்னியைக் கன்னியே காதலித் தாளே. 2152**

முன்னிக்கு - முன்னதாக உள்ளது, அதாவது ஆகாயம் இதற்கு ஒரு மகன், அம் மகன் ஓசை ஆகும். மூர்த்திக்கு ஆகாயத்தினின்று வெளிப்பட்ட காற்றுக்கு அசைவும் ஓசையுமாக இரண்டு பிள்ளைகள். காற்றில் உயிர்த்த நெருப்புக்கு ஒளி, ஓசை, சூடு என்று மூன்று பிள்ளைகள். (வதுவை - பெண்) பெண்ணுக்கு ஓசை, உருவம், சுவை, உணர்வு என்று நான்கு பிள்ளைகள். கன்னிக்கு - கன்னியாகிய நிலத்துக்கு ஓசை,ஒளி, ஊறு, சுவை, வாசனை என்று ஐந்து பிள்ளைகள்.

கன்னியாகிய மாயைக்கு முன்னாளில் இப்படி ஐந்து பிள்ளைகள் இல்லை, கன்னியாகிய மாயையும் உலக உயிர்களைப் படைக்கும் ஆசையால் அன்னை சக்தி ஐம்பூதங்களுடனும் பொருந்தி, ஐம்பூத சேர்க்கையான உலகைப் படைத்தாள் (வன்னி -நெருப்பு)

இப்பாடலில் திருமூலர் பஞ்ச பூதங்களையும் அவற்றின் குணங்களையும் கவிநயத்துடன் குறிப்பிட்டு அவ்வாறு இருப்பதும் அன்னையே என்று அருமையாகக் கூறுகிறார். மாணிக்க வாசகரும், திருவாசகத்தில் ‘‘பாரிடை ஐந்தாய் போற்றி’’ என்பார்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் 949 - பஞ்சபூதேசீ - நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்ற ஐந்து பூதங்களுக்கும் ஈஸ்வரி. அன்னை சக்தியின் பூஜையில் கந்த, புஷ்ப, தூப, தீப, நைவேத்யம் என்ற ஐந்து உபசாரங்கள் உண்டு. இவ்வாறு செய்வதால் பஞ்ச பூதங்களையும் அர்ச்சிப்பதாக பாவனை.

## 62. ஐம்புலன்களையும் அடக்க

**ஊமை எழுத்தொடு பேசும் எழுத்து உறில்**
**ஆமை அகத்தினில் அஞ்சும் அடங்கிடும்**
**ஓமயமுற்றுஅது உள் ஒளி பெற்றது**
**நாமயம் அற்றது நாம் அறியோமே. 2158**

ஊமை எழுத்து - தானே இயங்காத அதாவது பேசாத எழுத்து மெய் எழுத்து. பேசும் எழுத்து உயிர் எழுத்து. உயிர் மெய் எழுத்து எல்லாம் இங்கு ஊமை எழுத்து என்றது ‘ம்’ எனும் மெய்யெழுத்தை இதனோடு உயிரெழுத்தாகிய ‘அ’ சேர்ந்தால் ம்+அ=ம ஆகும். இதனோடு பேசும் எழுத்தாகிய ‘அ’ கர ‘உ’ கரம் சேர, அகர, உகர, மகரம் சேர ஒலிப்பது ‘‘ஓம்’’ என்னும் பிரணவம் ஆகும். இதில் ‘அ’ - அறிவாகிய சிவத்தையும், உ - ஆற்றலாகிய சக்தியையும் குறிக்கும்.

ஆமை அகத்தினில் அஞ்சும் அடங்கிடும் - ஆமை தன் எதிரியைக் கண்டவுடன் தலையையும், நான்கு கால்களையும் ஓட்டுக்குள் இழுத்துக்கொண்டு, பாறை போல் கிடக்கும். அதேபோல் ஆருயிர் பிரணவத்தில் பொருந்தி ஒளி பெற்றுத் திகழும். அந்த நிலையில் ஐம்புலன்களும் அடங்க, தன் முனைப்பு, நான் என்னும் ஆணவம் அழிந்தது என்பதை நாம் அறியோமே -- அதாவது பிரணவத்தில் பொருந்திய மனத்துள் இருந்து ஆணவம் தானாகவே விலகிவிடும் என்பதே கருத்து.

திருமூலர் ஐம்புலன்களையும் அடக்குவதற்கு பிரணவ மந்திர தியானமே உகந்தது என்பதை உலகோர்க்கு உபதேசம் செய்யும் அருமையான பாடலிது.



## 63. பரகதி அளிக்கும் பராசக்தி

**மணிமுடி பாதஞ் சிலம்பணி மங்கை**
**அணிபவள் அன்றி அருளில்லை ஆகும்**
**தணிபவர் நெஞ்சினுள் தன்னருளாகிப்**
**பணிபவர்க்கு அன்றோ பரகதியாமே. 1377**

மாணிக்க முடி அணிந்தவள். காலில் சிலம்பணிந்த கருணை வடிவான தெய்வம். இந்த அணிமணிகள் பூண்ட இவளை அல்லாமல் ஆன்மாக்களுக்கு அருளுவார் வேறு எவரும் இல்லை. ஆசைகளை விட்டொழித்து, கற்றறிந்து அடங்கிய சான்றோர்களின் மனத்துள் அருள் வடிவமாக எழுந்தருளி இருக்கும் அவளைப் பணிபவர்களுக்குப் பரகதி அளிக்கும் பராசக்தி இவளே. (தணிபவர் - புலனடங்கப் பெற்ற கற்றடங்கிய சான்றோர்)

முன்னும், ''அவளன்றி ஊர்புகும் ஆறு அறியேன்'' என்று கூறினார் திருமூலர். இங்கு திட்டவட்டமாக அன்னை சக்தியை - பரகதி (முத்தி) அளிப்பவளும் அவளே என்று கூறுவது காண்க.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம்-201. ஸத்கதிப்ரதா - நல்லகதியை (பரகதி) வழங்குபவள். ஸத் - ஸத்தாக இருப்பவள். கதி - அடையப் பட வேண்டியவளும் அவளே. வழியாகவும் இலக்காகவும் இருப்பவள். 326.கருணா ரஸ ஸாகரா - கருணைக் கடல் - ஸ்ரீலலிதா த்ரிசதீ - 153 காருண்ய விக்ரஹா - கருணையே உருவெடுத்தவள் 151.கடாக்ஷஸ்யந்தி கருணா-கருணை பெருகும் கடைக்கண் பார்வையுடையவள்.



## 64. ஞானமா சக்தி இவள்

**சுத்த வம்பு ஆரத் தனித்த சுகோதயள்**
**வத்துவ மாயா ளுமாசத்தி மாபரை**
**அத்தகை யான மனோரணி தானுமாய்**
**வைத்தவக் கோல மதியவ ளாகுமே. 1052**

சுத்து வம்பு ஆரத் தனத்தி - தூய கச்சும் மலர்மாலையும் அணிந்த மார்புடையவள். சுகோதயள் - இன்ப ஊற்றாக இன்னருள் புரியும் தன்மை உடையவள். வத்துவமாய் ஆளும் மாசத்தி மாபரை - மாயையைப் பொருளாகக் கொண்டு சீவாத்துமாக்களை ஆட்கொண்டருளும் பெரிய சக்தி பராபரை. அத்தகையான மனோரணி - இப்படிப்பட்ட மனம் என்னும் வனத்திலே வசிப்பவள்;

தானுமாய் வைத்த அக்கோலம் மதியவள் ஆகுமே- தனக்குத்தானே படைத்துக் கொண்ட இத்திரு உருவம் கருணை மழை பொழியும் ஒளிவடிவம் - மெய்யறிவாகும்.

(சுத்த - தூய, வம்பு - கச்சு, ஆரம் முத்து மணிமாலை, தனம் - மார்பு, சுகம் - இன்பம், உதயள் - உற்பத்திக்கு இடமானவள், வத்துவம்-மாயை, மனோரணி - மன ஆரணி - மனமாகிய காடு, ஆரணி-காடு, கோலம் - உருவம், மதி - வெண்ணிலா, அருள் மழை, ஞானம்,மெய்யறிவு, மெய்யுணர்வு எனப் பல பொருள் கொள்ளலாம்.

அன்னை மாயாசக்தி உடையவள். ஆனால் சீவாத்துமாக்களின் மீது பெரும் கருணை கொண்டு, அம்மாயா சக்தியினின்று விடுபடச் செய்து தெளிவைத் தருபவரும் அவளே என்கிறார் திருமூலர்.

அபிராமி பட்டர் அபிராமி அந்தாதியில் (36) ''பொருளே! பொருள் முடிக்கும் போகமே! அரும்போகம் செய்யும் மருளே! மருளில் வரும் தெருளே!...'' என்று வெகு அருமையாகக் கூறுகிறார்.

## 65. முக்காலமும் உணரலாம்

**ஆதி விதமிகுத் தண்தந்த மால்தங்கை**
**நீதி மலரின்மேல் நேரிழை நாமத்தைப்**
**பாதியில் வைத்துப் பல்காற் பயில்விரல்**
**சோதி மிகுத்துமுக் காலமுந் தோன்றுமே. 1069**

ஆதி விதம் மிகுத் தண் தந்த - ஆதியாகிய சிவப் பரம்பொருளின் முந்தைய படைப்புத் தொழில் பெருகத் தண்ணருள் புரிந்தவள். மால் தங்கை - திருமாலின் தங்கை நாராயணி.

நீதி மலரின் மேல் நேரிழை நாமத்தை - முறையாக அமைக்கப்பட்ட எட்டிதழ்களுடைய தாமரையில் (மலரின் மேல்) சிவசக்தியாகிய அவள் பெயரை (நேரிழை நாமத்தை), அந்தத் தாமரை நடுவில் (பாதியில்) வைத்துப் பலகாலும் தொடர்ந்து, இடைவிடாது செபித்து உரு ஏற்றினால், உடம்பு ஒளி மிகுந்து, சோதிமயமாக விளங்கும். நடந்த, நடக்கிற, நடக்கவுள்ள முக்காலமும் உணரும் வல்லமையும் அடையலாம்.

அன்னை சக்தியை இடையறாது மனதில் தியானிப்பவருக்கு முக்காலம் உணரும் ஆற்றல் கிடைக்கப் பெறும். உடலும் தெய்வ வடிவம் பெற்று சோதியாய் ஒளி மிளிரும்.

இப்பாடலில் அன்னை பராசக்தியை திருமாலின் சகோதரியாக (தங்கையாக) திருமூலர் காண்கிறார். ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் - 280. பத்மநாபஸஹோதரீ - பத்மநாபனான விஷ்ணுவின் உடன்பிறந்தவள். தாமரையைத் தொப்புளில் (நாபியில்) தோற்றுவித்ததனால் விஷ்ணுவுக்கு பத்மநாபன் என்று பெயர் (பத்மம் - தாமரை) அபிராமி பட்டரும், அபிராமி அந்தாதியில் (13),'' என்றும் மூவா முகுந்தற்கு இளையவளே. (61) ''செங்கண் மால் திருத்தங்கச்சியே..'' என்பார்.

## 66. சிவனுக்கு அருள்புரிபவளும் அன்னையே

**மேதாதி ஈரெட்டு மாகிய மெல்லியல்**
**வேதாதி நூலின் விளங்கும் பராபரை**
**ஆதார மாகியே ஆயந்த பரப்பினள்**
**நாதாதி நாதத்து நல்லரு ளாளே. 1070**

மேதை முதலான தத்துவங்கள் பதினாறுக்கும் தலைவி. வேத, வேதாந்த சாரமாக விளங்குபவள். உலக உயிர்களுக்கு எல்லாம் ஆதாரமாய் விளங்குபவள், அன்னை பராசக்தி

நாத நாதாந்த சொருபமாக விளங்கும் சிவப் பரம்பொருளுக்கு அருட்சக்தியாய் அமைந்து அருள் புரிபவளும் திரிபுரை இவளே. (மேதை - அறிவு, சுத்த வித்தை)

திருமூலர் இப்பாடலில் எல்லாவற்றிற்கும் மேலாக விளங்கும் பரம்பொருளான சிவப்பரம்பொருளுக்கு அருள் புரிபவள். அன்னை என்று சொல்வது அவருடைய பக்தியின் உச்சக்கட்டமாய் அமைந்துள்ளது. அன்னையைத் தவிர தெய்வம் வேறு ஒன்றும் இல்லை என்பதே இதன் சாராம்சம்.

ஸ்ரீலலிதாஸஹஸ்ரநாமம் - 231. மஹாபைரவ பூஜிதா - மஹா பைரவரால் பூஜிக்கப்பட்டவள். இவர் தேவியை பூஜித்ததாக பத்ம புராணம் கூறுகிறது. 935. ஜகத்தாதரீ-உலகத்தை தாங்குபவள், ஆதாரமாய் இருப்பவள். அன்னை வேதத்தின் வேராகவும் கிளைகளாகவும், கொழுந்துமாவும் விளங்குபவள். அவள் -'வேதமாதா-' அன்றோ! அன்னைதான் வேதத்தை சிவபெருமானுக்கு உபதேசம் செய்ததாகவும் கூறுவர்.

அபிராமி பட்டர் அபிராமி அந்தாதியில் (2) ''சுருதிகளின் பணையும், கொழுந்தும் பதி கொண்ட வேரும்'' என்று கூறுகிறார். அன்னையின் அருளில்லாமல் ஆவது ஒன்றுமில்லை.

## 67. சூலாயுதபாணியாக அன்னை

**சூலங் கபாலங்கை ஏந்திய சூலிக்கு**
**நாலாங் கரமுள நாக பாசாங்குச**
**மால் அங்கு அயன் அறியாத வடிவுக்கு**
**மேலங்கமாய் நின்ற மெல்லியலாளே. 1081**

திரிசூலம் மண்டை ஓடு இவற்றைக் கையில் ஏந்திய சூலிக்கு நான்கு திருக்கரங்கள் உள்ளன, சூலம், கபாலம் ஏந்தியது போக எஞ்சியுள்ள இரு திருக்கரங்களிலும், நாக பாசத்தையும் அங்குசத்தையும் கொண்டுள்ளாள்.

திருமாலும் பிரமனும் தேடியும் அறிய இயலாத திருவடி உடையவள். சிவபெருமானுக்கு மேலங்கமாய் அவர் உடலால் பாதியாகப் பொருந்தியவளாய் விளங்கும் மெல்லியள். (மேலங்கம் - மேல் பொருந்திய உடம்பு).

அன்னை சக்தி மெல்லியள். அவர் தாங்கியிருக்கும் சூலாயுதமும் மென்மையானது. அன்னையின் இக்கோலம் கண்டு மெய்யன்பர்கள் பயப்படமாட்டார்கள். அவர் மிருகங்களைப் போல் வாழும் மக்களுக்கு பயங்கரமானவள். ஞான வீரர்களுக்குப் பிரியமானவள். இவ்வுண்மையை நமது காலத்தில் தமது வாழ்க்கையில் கண் கூடாகக் காட்டியருளியவர் ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சர். கல்கத்தாவில் அவர் சிறப்பாக அல்லும் பகலும் பூஜை செய்தது ''அன்னை காளியைத் தானே!''

அன்னையின் திருவடியை காண யாராலும் இயலாது. இக் கருத்தினை அபிராமிபட்டர் அபிராமி அந்தாதியில் (86) ''மாலயன் தேட மறை தேட நின்ற காலையும்'' என்று வெகு அருமையாகச் சொல்கிறார். திருமால், பிரம்மா, வேதங்கள் வானவர்கள் அன்னையின் திருவடியைத் தேடினார்களே யொழிய அவர்களால் காணமுடியவில்லை என்று சூட்சமமாகக் கூறுகிறார்.

# 68. கருணையும் கண்டிப்பும் கொண்ட தாய்

**மெல்லியல் வஞ்சி விடமி கலைஞானி**
**சொல்லிய கிஞ்சுக நிறமன்னு சேயிழை**
**கல்லியல் ஒப்பது காணுந்திருமேனி**
**பல்லிய லாடையும் பன்மணி தானே. 1082**

அன்னை இளகிய மனம் கொண்டவள், கருணையே வடிவானவள். மென்மையானவள். (மெல்லியள்) என்றாலும் ஆன்மாக்களின் வினைப் பயனுக்கு ஏற்ப அவைகளுக்கு அருளுவதில் வஞ்சனை செய்பவள் (வஞ்சி) தரும நியாயம் தவற நடப்பவர்களைத் தண்டிக்கத் தவறாதவள். (விடமி) கலை ஞானம் கைவரப் பெற்றவர்கள் புகழ்ந்து சொல்லும் முள்முருங்கைப் பூ போன்ற செக்கச் சிவந்த நிறமுடைய திருமேனி கொண்ட அழகிய அணிமணிகள் புனைந்தவள். (சேயிழை) மாணிக்க கல் போன்று ஒளி விடும் வனப்புடையவள். (கல்லியது ஒப்பது காணும் திருமேனி) இன்னும் பல விதமான (பல்லியல்) ஆடை ஆபரணங்கள் (பன்மணி) தரித்த பாவை அவள்.

(இஞ்சுகம்-சிவந்த முள் முருங்கைப் பூ)

அன்னை கருணைக் கடலாக இருந்த போதிலும் தர்ம நியதியைத் தவறியவர்களை தண்டிக்கத் தவறாதவள். ஒருதாய் தன் சேய் தவறான வழியில் செல்லும் போது அதனைக் கண்டித்து தண்டித்து நல்ல வழியில் திருப்புபவள் அன்றோ! ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம். 194. துராசார சமனீ - கெட்ட நடத்தை அடக்குபவள். ஸர்வாருணா- தன்னுடைய சரீரம், வஸ்த்ரம், ஆபரணம், புஷ்பம், காந்தி. எல்லாமே சிவந்த நிறமாயுள்ளவள். கருணையைக் குறிக்கும் நிறம் சிவப்பு. அபிராமிபட்டர் அபிராமி அந்தாதி முதற் பாடலிலேயே அன்னையின் திருமேனியை பலவித உவமைகளாடு சிவந்த நிறமாக வர்ணிக்கிறார். இராமலிங்க வள்ளலார், ‘‘எம் ஒற்றி மயிலே வடிவுடை மாணிக்கமே!’’ என்பார். மாணிக்கம் எந்நேரமும் சிவப்பு நிறத்தோடு ஒளி தருகிறது.

## 69. நல்லிசை நாயகி

**மெல்லிசைப் பாவை வியோமத்தின் மென்கொடி
பல்லிசைப் பாவை பயன்தரு பைங்கொடி
புல்லிசைப் பாவையைப் போகத் துரத்திட்டு
வல்லிசைப் பாவைமனம்புகுந் தானே. 1152**

இன்னிசைப் பாடல் போன்ற இனிய மொழி அருளுபவள். ஆகாயம் அளந்து நிற்கும் ஒளி மின்னல் கொடி போன்றவள், பலரும் போற்றிப் பணியும் பெண்ணரசி. ஆன்மாக்களின் பக்குவத்திற்கும், பக்திக்கும் ஏற்ப, அவரவர்களுக்கு உரிய நற்பயனை நல்குபவள், அற்பர்கள், வீண் புகழ்ச்சிக்கு ஆசைப்படும் பேதைமையை விலக்கிவிட்டு, அறிவை மேன்மைப்படுத்த வல்லவளாகிய அருட்சக்தி என் மனத்துள் புகுந்து இடம் கொண்டாள்.

நம் மனதில் அன்னை இடம் கொள்ள வேண்டுமானால் நாம் நம் மனதிலிருந்து அறியாமையை அகற்ற வேண்டும். தன் சொந்த அனுபவத்தை உலகிற்கு திருமூலர் சொல்லும் அருமையான பாடலிது.

(மெல்லிசை - இனிய மொழி வியோமம் - ஆகாயம் பல் இசை - பலரும் புகழும் பாராட்டு மொழி, புல்லிசை - வீண் புகழ்ச்சி, துரத்திட்டு - விலக்கி விட்டு. வல்லிசைப்பாவை - அருட்சக்தி)

மெல்லிசைப் பாவை: அபிராமி பட்டர் அபிராமி அந்தாதியில் (15) ''பண்ணளிக்கும் சொல் பரிமள யாமளைப் பைங்கிளியே ''பண்களிக்கும் குரல் வீணையும்'' (70) என்பார்.

வியோமத்தின் மெள் கொடி ''மலர்க்கமலை துதிக்கின்ற மென்கடி'' (அபிராமி அந்தாதி 1) ஸ்ரீலலிதா ஸஹ்ரநாமம் - 107. தடில்லதாஸமருஸி - மின்னல் போல் பேரொளியுடன் கூடியவள். நாராயண சூக்தம் ''வித்யுல்லைகேவ பாஸ்வரா'' திருமூலர் இப்பாடலில் அன்னையை ஒரு பச்சிளங் கொடி போன்ற மெல்லியவளாகக் காண்கிறார்.

## 70. மாலினி, சூலி, மகேசுவரி

**காலவி எங்குங் கருத்தும் அருத்தியுங்**
**கூலவி ஒன்றாகுங் கூட இழைத்தனள்**
**மாலினி மாகுலி மந்திர சண்டிகை**
**பாலினி பாலவன் பாகம தாமே. 1216**

காலவி - அன்னை பராசக்தி கால எல்லைகளைக் கடந்தவள். கால தத்துவமாய் இருப்பவள். சொல்லும் பொருளும் ஆனவள். உயிர்கள் உய்யும் பொருட்டு அருளை வழங்கும் அநுகூல சக்தியாயிருப்பவள், ஆருயிர்கள் கூடவும், இறையருள் நாடவும் உதவுபவள். பேரன்பு மிக்கவள் (மாலினி) மூலாதாரமானவள் (மாகுலி) மந்திரப் பொருளானவள், சண்டிகையாகக் கோலம் கொள்ளுபவள்.

உலகைப் பரிபாலிப்பவள். பாலமுதானவள். சிவப் பரம்பொருளை தன் வலப்பாகம் கொண்டவள் இவளே. (அருத்தி - பொருள், கூலவி - உதவுபவள். இழைந்தனள் - சேர்ந்திருப்பவள்)

இம்மண்ணுலகில் பிறந்த மானிடர்களுக்கு இறையருள் பெற அன்னையே உதவுவாள் என்று சொல்வதிலிருந்து திருமூலரின் பக்தியை நாம் உணர்கிறோம். மீண்டும் மீண்டும் மறவாமல் அன்னைதான் அனைத்தையும் செய்பவள், அவளின்றி அணுவும் அசையாது என்பதை உலகோருக்கு திருமூலர் வலியுறுத்திக் கொண்டிருக்கிறார்.

காலவி - ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம்-751. மஹாகாளீ - மஹதீயாகவும் (பெரியவளாகவும்) காளியாகவும் இருப்பவள். காலத்தை முடிவு செய்கிறவள் - 'காளீ' காலனான யமனுக்கும் முடிவு செய்வதால் - மஹா காளி'', திருக்கடவூரில் யமனை எட்டி உதைத்தது அன்னையின் இடது கால் அன்றோ! அன்னையின் அன்பர்களைக் கண்டால் யமன் பறந்தோடி விடுவான் அன்றோ! எனவே பிறப்பு, இறப்பு இவற்றிலிருந்து விடுபட்டு அழியா ஆனந்தமாகிய முக்தியை அடைய அன்னையின் திருவடிகளைச் சரண் அடைய வேண்டும்.

## 71. சூலினி சுந்தரி

**வேயன தோளி விரையுறு மென்மலர்**
**ஏய குழலி இளம்பிறை ஏந்திழை**
**தூய சடைமுடிச் சூலினி சுந்தரி**
**ஏய எனது உள்ளத்து இனிதிருந் தாளே. 1104**

மூங்கிலைப் போன்ற தோளுடையவள் அன்னை. வாச நறுமலர் சூடிய கூந்தலுடையவள். மூன்றாம் பிறைச் சந்திரன் போன்ற அழகிய நெற்றியை உடையவள். அழகிய அணிமணி ஆபரணங்களைச் சூடிக்கொண்டிருப்பவள்.

தூய ஒளி கிரணங்களைச் சடைமுடியாகக் கொண்டவள். சூலம் ஏந்தியவள். சுந்தரத் தோற்றம் கொண்டவள். இந்த ஆதி பராசக்தியே என்னுள்ளம் பொருந்தி, என் மனதில் வீற்றிருந்தாள்.

(வேய் - மூங்கில், வேயன - மூங்கிலைப் போன்ற விரை - வாசம், உறும்-பொருந்திய, ஏய - பொருந்திய, குழல் - கூந்தல், ஏந்திழை - அணிமணி பூண்டவள் சுந்தரி - அழகி)

சாக்த அன்பர்கள் அனைவரும் அன்னையின் திருமேனி அழகை வர்ணிப்பதில் ஆர்வமும், ஆனந்தமும் கொண்டவர்கள். எந்த சேயும் தன் தாயைப் பற்றி பெருமை கொள்வதில் மகிழ்ச்சியடையும் அன்றோ! இதற்கு விதிவிலக்கு அல்ல திருமூலர் என்பது தெளிவாகிறது. அபிராமிபட்டர் அன்னையை ‘‘உடையாளை ஒல்கு செம்பட்டு உடையாளை ஒளிர்மதி செஞ்சடையாளை’’ என்று கவிநயத்துடன் வாணிக்கிறார்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம்-51. ஸர்வாபரண பூஷிதா - எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப் பெற்றவள்.



## 72. அணி மணி பூண்ட ஆனந்த வல்லி

**பன்மணி சந்திர கோடி திருமுடி**
**சொன்மணி குண்டலக்காதி உழைக்கண்ணி**
**நன்மணி சூரிய சோம நயனத்தள்**
**பொன்மணி வன்னியும் பூரிக்கின்றாளே. 1083**

பலவித மணிகள் பதித்த சந்திர கலைகள் பொருந்திய திருமுடி தலையில் சூடியவள் சிறப்பித்துச் சொல்லப்படும் மகர குண்டலங்களை அணிந்த காதுகளையும், மானைப் போன்ற அழகிய கண்களையும் கொண்டவள்.

மணி போன்ற சூரிய சந்திரர்களைக் கண் ஒளியாகக் கொண்டிருப்பவள். இவ்வயிரவி பொன் போலும், ஒளிவிடும் நெருப்புச் சுடர்போலும் எங்கும் நிறைந்து, நினைப்பவர் மனதில் மகிழ்ச்சியை நிரப்புவளாயும் இருக்கிறாள்.

(கோடி - முடி உறுப்பு, குண்டலம் - காதணி, உழை - மான், சோமன் - சந்திரன் வன்னி - நெருப்பு, அக்கினி, பூரித்தல் - நிறைதல், மகிழ்வித்தல்)

தொடர்ந்து இப்பாடலிலும் திருமூலர் அன்னைக்கு பலவிதமான ஆபரணங்களை அணிவித்து அகமகிழ்கிறார். அன்னை சூரிய சந்திரர்களை தன் கண்களாகவும், தாடங்கங்களாகவும், தனங்களாகவும் கொண்டவள். உலகிற்கு ஒளி தரும் சூரியன் சந்திரன், அக்கினி ஆகியவர்களுக்கு அவ்வொளியைத் தருவதற்கு மூல காரணமாய் இருப்பளும் இவளே.

அன்னையின் கண்கள் மானுடைய கண்கள் போல் ஓரிடத்தில் நிலைத்து நிற்காது. அன்னை, தன் கனிவுடன் கூடிய கடாக்ஷம் எல்லா பக்தர்கள் மீதும் விழட்டும் என்று தன் கண்களை சுழற்றிக் கொண்டே இருக்கிறாள்! என்னே அன்னையின் கருணை உள்ளம்!

# 73. தவயோகி தயாபரி

**கண்ட சிலம்பு வளைசங்கு சக்கரம்**
**எண்டிசை யோகி இறைவி பராசத்தி**
**அண்டமோடு எண்டிசை தாங்கும் அருட்செல்வி**
**புண்டரிகத்தின் உள் பூசனையாளே. 1085**

கண்டச் சிலம்பு-கைவளையல்கள் சங்கு, சக்கரம் அணிந்த அன்னை பராசக்தி எட்டுத்திசைகளிலும் நீக்கமற நிறைந்திருக்கிற தவயோக தத்துவம். அண்ட கோடிகள் அனைத்துத் திக்குகள் இவற்றை எல்லாம் தாங்கி நிற்கிற தயாபரி. அருட் குணமுடையவள்.

பணிந்து வணங்கித் தொழுபவர் மனத்தாமரையுள் எழுந்தருளியுள்ளவள். அவர்கள் பூசையை ஏற்பவள். பூஜிக்கப்படுபவள். இவளே (புண்டரிகம் - தாமரை கண்டச் சிலம்பு - காலில் அணியும் ஒரு வகைச் சிலம்பு).

அன்னை தன் சேய்களுக்கு எவ்வாறு தவமிருக்க வேண்டும் என்பதை தானே முன்னோடியாக நின்று உணர்த்துகிறார். தவத்தின் குறிக்கோளாயும், தவத்தின் வடிவமாயும் இருக்கும் அன்னை - தாட்சாயணியாகவும், பார்வதியாகவும், காமாட்சியாகவும், கற்பகாம்பிகையாகவும், அபயாம்பி கையாகவும், கன்னியாகுமரியாகவும் தவம் இயற்றியுள்ளாள்.

சென்னை மயிலையிலும் (மைலாப்பூர்), மயிலாடுதுறையிலும் அன்னை மயில் வடிவத்தில் தவம் செய்ததும் நோக்குக. அதாவது எப்பிறவியெடுத்தாலும் இறைவனை மறவாமை வேண்டும் என்பதே அன்னை நமக்கு புகட்டும் பாடம். தாயுமானவரும்,

''எந்தவுடலேனும் எடுத்தவுடல் நல்ல தென்று
சிந்தை செய வந்ததிறஞ் செப்பாய் பராபரமே.'' என்று கூறுகிறார்.

## 74. தவயோக தலைவி

**காரண மந்திரம் ஓதுங் கமலத்துப்**
**பூரண கும்ப இரேசம் பொருந்திய**
**தாரணி நந்தி நடுஅுங்கு உரைசெய்த**
**ஆரண வேதநூல் அந்தமு மாமே. 1088**

வேத மந்திரங்களுக்கெல்லாம் காரணமானவள். மூச்சுப் பயிற்சியில், உள்ளத் தாமரையில் எல்லாவற்றிற்கும் அப்பாலான உயர் - பரம் பொருளை நினைத்து, மூச்சை நன்றாக இழுத்து, அதனை சிறிது நேரம் நிறுத்தி பின் வெளியே விடுகின்ற யோகப் பயிற்சிக்கு துணையான தாரணி (தாரணை - யோகம், தாரணி -யோகத்துக்குதவுபவள்).

நந்தியெம்பெருமான் புருவ நடுவில் பொருந்தி அருளிய பிரணவப் பொருளின் - மறைகளின் முதலும் முடிவும் அன்னையே என்பதை உணருக. அதாவது அன்னையே வேதங்களிலும் ஆதியும் அந்தமும் ஆனவள். (உரை - பிரணவம், ஆரணவேத நூல் - வேதாகம விரிவு)

யோகம் செய்பவர்களுக்கு அடிப்படையாக இருப்பது - பிராணாயாமப் பயிற்சி இப்பயிற்சியில் காற்றை மூக்கின் ஒருதுவாரம் வழியாக இழுத்து சிறிது நேரம் அடக்கிப் பின் மறு துவாரம் வழியாக வெளியே செலுத்துவது. (பூரகம் - காற்றை இழுப்பது, கும்பம் - நிறுத்துதல், இரேசம் - வெளிவிடுதல்)

திருமூலர் சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகியவற்றை கடந்த ‘தபஸ்வி’ இப்பாடலை உலகோர்க்கு யோகத்தினால் அன்னையை அடையும் வழியைத் தெரிவிக்கிறார்.



## 75. அஞ்ஞானம் அகற்றும் அணங்கு

**தாமக் குழலி தயைக்கண்ணி உள்நின்ற**
**ஏமத்து இருளற வீசும் இளங்கொடி**
**ஓமப் பெருஞ்சுடர் உள்ளெழு நுண்புகை**
**மேவித்தமுதொடு மீண்டது காணே 1091**

மணமலர் நிறைந்த மாலைகள் சூடிய மங்கை, அருட் பார்வை உடைய தாமரை தண் மலர்க் கண்ணினாள். ஆன்மாக்களின் அஞ்ஞான இருளை விரட்டியடிக்கும், பேரொளிப் பிழம்பாகத் திகழும் இளங்கொடி போன்றவள். ஓமப்புகைக்குள்ளே ஒளிரும் வாச நறும் புகையோடு, பொருந்திய பிராணனில் கலந்து அருளமுது வழங்கிக் காத்தருள்பவள். (ஓமம் - அஞ்ஞானம், வீசும் - ஒட்டும், நுண்புகை - பிராணன் அமுது -அருளமுதம்-மேவி-கலந்து)

நமக்கு எதிரியாய் இருப்பது நம்முடைய அறியாமை என்கிற அஞ்ஞானம். அதை அகற்றினால் தான் மீண்டும் மீண்டும் மண்ணுலகில் பிறவி எடுப்பதைத் தவிர்க்க முடியும். அறியாமையை அகற்ற அன்னையிடம் அடைக்கலமாக வேண்டும் ஏனெனில் அவள் தான் அறியாமை இருளை விரட்டும் ஒளியாகத் திகழ்பவள். இக்கருத்தினை ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் - 4. சிதக்னி குண்ட ஸம்பூதா என்ற திருநாமம் அருமையாக விளக்குகிறது.

சித் என்ற பதம் சுத்தமான ப்ரம்மம் என்று பொருள்படும். அது அறியாமை (அஞ்ஞானம், அவித்யை) என்னும் இருளுக்கு விரோதியானதால் 'சிதக்னி' என்று சொல்லப்பட்டது. 'சித்' என்னும் நெருப்பில் தோன்றியவள். அதாவது சித்தாகின்ற அக்னி குண்டத்தில் அஞ்ஞானம் அழிய, அன்னையின் உண்மையான ஸ்வரூபம் தோன்றுகிறது. சித் என்னும் ஞானமே அக்னி, பகவத்கீதையிலும், 'ஞானாக்னி', ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே ததா'' (4.37) என்று வருவது காண்க.

## 76. உச்சித் தலையில் ஒளி வடிவாக

**காணும் இருதய மந்திர முங்கண்டு**
**பேணு நமவென்று பேசுந் தலைமேலே**
**வேணு நடுவு மிகநின்ற ஆகுதி**
**பூணு நடுவென்ற வந்தஞ் சிகையே. 1092**

உள்ளத்தைக் கோயிலாகக் கருதிக் கொண்டு, மந்திரப் பொருளை மனதால் செபித்து, தலைமேல் வீற்றிருக்கும் தேவி திரிபுரைக்கு வணக்கம் (நம) என்று சொல்லி நடுநாடி வழியாகச் சுழுமுனையில் ஆகுதியாக இட்டு வழிபட வேண்டும். உச்சித்தலையில் ஒளிவடிவாக இறைவி அருவாள்.

(வேணு - மூங்கில், நடுநாடி ஆகுதி - வேள்வித் தீயில் இடப்படும் பலி, அந்தம் - முடிவு, சிகை - தலை, தலைமுடி, உச்சி, சிகர மந்திரம் என்றும் கூறுவர்)

இப்பாடலில் திருமூலர் குண்டலினி சக்தியை உடலின் கீழிருந்து தலை உச்சிக்கு எழுப்புவதை ஸுக்ஷ்மமாக கூறுகிறார். குண்டலினீ சக்தி அம்பாளின் ஸுக்ஷ்ம ரூபம். மனித உடலின் நடுப்பகுதியில் கீழ் பாகத்தில் உள்ள குதத் துவாரத்திலிருந்து தலையின் உச்சியிலுள்ள ப்ரம்மரந்த்ரம் வரை ஸுஷும்நா நாடி உள்ளது. இதில் கீழ்ப்பகுதியில் குண்டலினீ ஒரு ஸர்ப்ப வடிவில் மூன்றரை சுற்றுகளாகத் தன் உடலை சுருட்டிக்கொண்டு வளையங்களின் நடுவில் தன் தலையை கீழ்நோக்கி வைத்துக் கொண்டு உறங்குகிறது.

இந்தக் குண்டலினி சக்தியை யோகப்யாசத்தினால் எழ வைத்தால் அது ஸுஷும்நா நாடியின் வழியாக தலையின் உச்சியிலுள்ள ப்ரம்மரந்தரத்திற்கு செல்லும். இதைத்தான் திருமூலர் இங்கு குறிப்பிடுகிறார்.

## 77. இருளும் ஒளியும் ஆனவள்

**சாற்றிய வேதம் சராசரம் ஐம்பூதம்**
**நாற்றிசை முக்கண்ணி நாடும் இருள்வெளி**
**தோற்றும் உயிர்ப்பன்மை சோதி பராபரை**
**ஆற்றலொடா ய்நிற்கும் ஆதி முதல்வியே. 1098**

சொல்லப்படும் வேதம், உலகில் உள்ள அசையும் மற்றும் அசையாதிருக்கின்ற பொருட்கள், நிலம்-நீர், நெருப்பு-காற்று-ஆகாயம் என்ற ஐம்பெரும் பூதங்கள், நான்கு திசைகள் இவை அனைத்திலும் நிறைந்திருப்பவள். மூன்று கண்களை (சூரிய, சந்திர, அக்கினி) உடையவள். இருளும், ஒளியும் தோன்றக் காரணமாக இருப்பவள். உயிர்களுக்கெல்லாம் அருளை வழங்குபவளாயும், சோதிச் சுடரொளியாகவும் உள்ள பராசக்தியே எல்லாம் வல்ல முதல்வி, ஆதி - தலைவி ஆவாள்.

(சாற்றிய-சொல்லிய, சரம் - அசைவு, அசரம் - அசையாத, உயிர்ப் பன்மை - உயிர்க்குலம்)

சிவனை இரண்டாவது தெரியாமல் சாந்தமாக இருக்கும் மூர்த்தியாகவும், சக்தியை த்வைத ப்ரபஞ்ச காரணியாகவும் கூறப்படுகிறது. அதாவது அன்னை சக்தியே மாயையாக இருந்து பின்னர் அதிலிருந்து தெளிவையும் தருபவள். ஔவைப் பாட்டியார் விநாயகர் அகவலில், ‘‘இருள் வெளி இரண்டிற்கும் ஒன்றிடம் என்ன’’ என்று எளிமையாக, ஆழ்ந்த கருத்துடன் கூறுகிறார்.

அனைத்திலும் அன்னை அந்தர்யாமியாக இருந்து கொண்டு ஆருயிர்க் கெல்லாம் அருள் மழை பொழிந்து கொண்டிருப்பவள்.



## 78. சிவனை அறியச் செய்பவள் இவளே

**கோலக் குழவி குலாய புருவத்துள்**
**நீலக் குவளை மலரன்ன கண்ணினாள்**
**ஆலிக்கும் இன்னமுது ஆனந்த சுந்தரி**
**மேவிச் சிவத்தை வெளிப்படுத் தாளே. 1100**

அழகிய கருங் கூந்தலுடையவள். ஒளி விளங்கும் விழிப் புருவம் உடையவள். குவளை மலர் போன்ற கண்களை உடையவள். மகிழ்ச்சியைத் தரும் உயிரளிக்கும் அமுதம் போன்றவள். ஆனந்தமே வடிவானவள். அழகுருவானவள். சிவப் பரம்பொருளை சீவர்கள் அறியச் செய்பவள் இவளே. (கோலம் - அழகு, குழல் - கூந்தல், குலாய - கூடிய ஆலிக்கும்- மகிழ்ச்சி அளிக்கும் மேலை - மேலான, முன்னதான).

அன்னையின் அன்பர்களுக்கு அவள் வடிவமே ஆனந்தத்தைத் தருவது. அதனால் தான் அவர்கள் அன்னையின் திருமேனியை வர்ணிப்பதை தவறுவதே இல்லை.

அன்னையின் அழகை அபிராமிபட்டர் அபிராமி அந்தாதியில் ''அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி'' என்பார்.

ஸ்ரீலலிதாஸஹஸ்ரநாமம் - 48. மஹாலாவண்ய சேவதி: அழகுக்கெல்லாம் ஒரு களஞ்சியம் அல்லது பெட்டகமாயிருப்பவள் 185. நீலசிகுரா - கருமை (நீல)நிறத்தால் அழகாகத் தோன்றும் கூந்தலையுடையவள் 729. ஆனந்த கலிகா - ஆனந்தத்தின் அம்சமாக இருப்பவள் 730 ப்ரேமரூபா - அன்பின் வடிவானவள் 731. ப்ரியங்கரீ - ப்ரியத்தைச் செய்பவள் 727. சிவஞானப்ரதாயினீ, சிவ சம்பந்தமான ஞானத்தைத் தன் பக்தர்கருக்கு தருபவள். சிவ = மங்களம். அந்த ஞானத்தை, அதாவது ப்ரஹ்ம ஞானத்தைத் தருபவள்.

அன்னை சக்தியின் மூலமாகவேதான் சிவப்பரம்பொருளை அறிந்துணர முடியும் என்று திருமூலர் இங்கு கூறுகிறார். அதாவது அவள் அருளாலே அவன்தாள் வணங்கி என்று!

## 79. ஆட்கொண்டு அருளினாள் அன்னை

**வெளிப்படு வித்து விளைவறி வித்துத்**
**தெளிப்படு வித்துதென் சிந்தையி னுள்ளே**
**களிப்படு வித்துக் கதிர்ப்படு சோதியை**
**ஒளிப்படு வித்தென்னை உய்யக்கொண்டாளே. 1101**

சிவப்பரம்பொருளை அறியச் செய்து, அப்பரம்பொருளை வணங்குவதால் பெறும் பயனைச் சீவன்கள் அறிய உணர்த்தி, மயங்கும் அறியாமையிலிருந்து நீங்கி, உயிர்களைத் தெளிவடையச் செய்து, மனத்துக்குள்ளே மகிழ்ச்சி உண்டாகச் செய்து, ஒளி சிந்தும் சோதி ஒளிக் கிரணங்களோடு என் உள்ளத்துள்ளே எழுந்தருளி என்னையும் ஆட்கொண்டு அருளினாள். (வெளிப்படுவித்து-அறியச் செய்து, களிப்படுவித்து - மகிழ்வுண்டாக்கி, கதிர் - ஒளிக்கோடுகள், உய்ய - பிழைக்க).

ஸகுண உபாசனையிலிருந்து நிர்க்குண உபாசனைக்கு செல்லும் மார்க்கத்தை திருமூலர் இப்பாடலில் உலகோர்க்கு உணர்த்துகிறார். நாம் முதலில் பல விக்ரஹங்களைத் தொழுது பூஜை செய்கிறோம். இதற்கு அடுத்தபடியாக அன்னையை சோதி ரூபமாக நம் மனதிலும் காண முயற்சி செய்ய வேண்டும். ஏனெனில் எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்ட பரம்பொருளுக்கு ஒரு நாமமோ, ஒரு உருவமோ இல்லை என்று பல அருளாளர்கள் கூறியுள்ளனர். மாணிக்க வாசகரும், (திருவாசகம்)

''ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றும் இல்லாற்கு ஆயிரம்
திரு நாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ.'' என்பார்

ஸ்ரீலலிதாலஹஸ்ர நாமமும் - 300 நாம ரூப விவர்ஜிதா என்று அன்னையைச் சொல்கிறது. அதாவது அன்னை பெயரும் வடிவமும் இல்லாதவள். அபிராமி பட்டரும் அன்னை அபிராமியை தன் இதயத்தாமரையில் ஜோதி வடிவமாகத் (பௌர்ணமியாக) தானே கண்டார்!

## 80. கலைகளாக காட்சி தரும் கண்ணி

**கொண்டனள் கோலங் கோடி அநேகங்கள்**
**கண்டனள் எண்ணெண் கலையின்கண் மாலைகள்**
**விண்டனள் மேலை விரிகதிர் மூன்றையுந்**
**தண்டலை மேல்நின்ற தையல் நல்லாளே. 1102**

உலகம் உய்யும் பொருட்டாகவும், சீவன்கள் சிவப் பேறு பெறட்டும் என்பதற்காகவும், அவரவர் மனப் பக்குவத்திற்கு ஏற்ப அன்னை கோடி கோடித் தோற்றங்கள் கொண்டிருக்கிறாள். பல கோடி உயிர்களுக்குள்ளும் பரவி நிற்கிறாள். அறுபத்து நான்கு கலைகளாகவும், அக்கலைகளின் வெளிப்பாடான வேத நூல் விளக்கங்களாகவும் இருக்கிறாள். விரிந்து ஒளி தரும் சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய மூன்றையும் படைத்தருளிய அவளே குளிர்ந்த தலை உச்சியில் தலைத் தொளையில் சகஸ்ர அறையுள் பொருந்திய சங்கரி மாதரசியாவாள். (தண்டலை - தண்+தலை=குளிர்ச்சி பொருந்திய தலை)

நிர்க்குண உபாசனைக்கு செல்லுவதற்கு முன் சகுண உபாசனை தேவை என்பதை உணர்த்தவே சீவர்களின் ப்ரிதிக்காக அன்னை கணக்கற்ற தோற்றங்களில் காட்சி தருகிறாள். எல்லா உயிர்களின் உள்ளங்களிலும் பாரபட்சமின்றி பரவி இருக்கிறாள். உலகிற்கு ஒளி தரும் சூரியன், சந்திரன், அக்கினி என்ற மூன்றும் இயங்குவது அன்னையின் ஆற்றலினாலும், அருளினாலும் தான் என்று திருமூலர் இங்கு திட்டவட்டமாகக் கூறுகிறார். அதாவது, ‘‘அவளின்றி அணுவும் அசையாது.’’

தலையின் உச்சியில் ஸஹஸ்ராரம் உள்ளது. குண்டலினீ சக்தியை மூலாதாரத்திலிருந்து எழுப்பி தலை உச்சிக் கொண்டு செல்லும் அன்பர்களுக்கு அவள் மங்கலம் தரும் சிவசக்தியாக காட்சி அளிப்பாள்.

## 81. வாலைக் குமாரியாக

**குலாவிய கோலக் குமரியென் உள்ளம்**
**நிலாவி இருந்து நெடுநாள் அணைந்தும்**
**உலாவி இருந்துணர்ந்து உச்சியின் உள்ளே**
**கலாவி யிருந்த கலைத்தலை யாளே. 1111**

என்னுள்ளே கலந்து இருந்த அழகிய வாலைக் குமரி என்னுள்ளத்துள்ளே நீங்காது என்னை விட்டுப் பிரியாது நெடுநாள் நிலைத்திருந்தாள். உச்சித் தொளையில், தலையில் நடமாடியிருந்தாள். கலைகளுக்கெல்லாம் தலைவியானவள். அவளே அன்னை சக்தி.

(குலாவி - மகிழ்ந்து, கலாவி-கலந்து, கலைத்தலையாள் - கலைகளுக்குத் தலைவி, சந்திர கலைகளைத் தலையில் தரித்தவள்)

இப்பாடலில் அன்னையை ஒரு அழகிய இளம் பெண்ணாக வாலைக் குமரியாக திருமூலர் தன்னுள்ளே ஒரு காட்சியை உருவாக்குவதைக் காண்கிறோம்.

வாலை - பாலா, பாலாம்பிகை, வாலாம்பிகை என்ற திருநாமங்கள் அன்னையை சிறுவயசுப் (ஒன்பது வயசு) பெண்ணாக வர்ணிப்பது. சித்தர்கள் வாலையைத்தான் வழிபடும் தெய்வமாகக் கொண்டிருந்தனர். ''வாலையடி சித்தருக்கு தெய்வம் தெய்வம்'' என்பது வழிவழியாய் வந்த மொழி பாலா உபாசனை சித்தர்குரியது. அடுத்து சிலசித்தரின் பாடல்களைக் காணலாம். ''சக்தி சடாதரி வாலைப் பெண்ணாம்'', ''சித்தர்கள் போற்றிய வாலைப் பெண்ணாம்'', எங்கும் நிறைந்தவள் வாலைப் பெண்ணாம். (கொங்கணர்)

பத்து வயதினை உடை பாவையினையன்றோ நீ
சித்தர்களுக்கெல்லாம் தாயாய் செய்தாய் மனோன்மணியே''
என்ற மஸ்தான் சாகிபு பாடலும் காண்க.

## 82. உள்ளங் குலாவி நின்றாள்

**ஆருயி ராயும் அருந்தவப் பெண்பிள்ளை**
**காரியல் கோதையள் காரணி நாரணி**
**ஊரும் உயிரும் உலகும் ஒடுக்கிடுங்**
**கோரிஎன் உள்ளங் குலாவி நின்றாளே. 1110**

ஆருயிர்கட்கெல்லாம் அன்பு செய்ய மனம் கொண்டிருக்கும் தவப்பெருமாட்டி மழை போன்ற கரிய நிறக் கூந்தலுடையவள். உலகத் தோற்றத்திற்கும் இயக்கத்திற்கும் ஒடுக்கத்திற்கும் காரணமாக இருப்பவள். அன்புள்ளம் கொண்டவள். ஊரையும் உலகையும் ஒடுக்க, காலத்தில் அழித்து ஒழிக்கக் கோரமான உருவம் கொள்ளுபவள். இப்படிப்பட்ட இவள் என்னுள் அன்போடு கலந்து (குலாவி) இருந்தாள்.

படைத்தல், காத்தல், அழித்தல் என்ற மூன்று தொழில்களும் நடப்பதற்கு காரணமாய் இருப்பவள் அன்னை சக்தியே என்று மீண்டும் உலகோர்க்கு நினைவூட்டுகிறார் திருமூலர். ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தின் முதல் மூன்று திருநாமாக்கள் 1. ஸ்ரீமாதா 2. ஸ்ரீமஹாராஜ்ஞீ - 3. ஸ்ரீமத் ஸிம்ஹாஸனேச்வரீ. இந்த மூன்று தொழில்களையும் செய்பவளாகக் குறிக்கிறது.

காஞ்சி பரமாச்சாரியார், ‘‘அம்பாளே ப்ரம்ம ரூபமாக சிருஷ்டிகர்த்ரியாகவும், கோவிந்த ரூபிணியாக கோப்த்ரியாகவும், ருத்ர ரூபமாக ஸம்ஹார ரூபிணியாகவும் விளங்குகிறாள் என்று ஸ்ரீலலிதா ஸஹஸ்ராரநாமத்திலும் இதே கருத்து வருகிறது. அவள் ஒருத்திதான் இப்படியெல்லாம் விளையாடுகிறாள்’’ என்று எளிமையாகவும் அருமையாகவும் யாவருக்கும் புரியும் வகையில் சொல்கிறார்.



## 83. அனைத்தினிற்கும் தலைவி

**ஓதிய வெண்ணென் கலையின் உயர்கலை**
**ஆதியில் வேதமே யாமென்று அறிகிலார்**
**சாதியும் பேதமும் தத்துவமாய் நிற்பள்**
**ஆதியென்று ஓதினள் ஆவின் கிழத்தியே. 1121**

சொல்லப்படுகின்ற (ஓதிய) நூல்களில் எல்லாம் தலையான சிறந்த நூலான வேதம் கூறும் கலையாகிய பிரணவம் நாமே என்பதை மனிதர் அறியாதிருக்கின்றனர். சாதிகளும் அதன் பலவான பிரிவுகளும் (பேதம்) தத்துவங்களும் ஆகிய அனைத்துக்கும் தானே தலைவி என்பதை ஆருயிர்கட்கெல்லாம் தாயாகிய அன்னை எனக்கு உபதேசித்தாள். (ஆ - உயிர் ஆவின் கிழத்தி - உயிர்க்கு உயிராக உதவும் உரிமை உடைய தாய் போன்றவள். கிழத்தி - உரிமையானவள்).

நம்மை நாமே சரியாகப் புரிந்து கொள்ளவில்லையே என்று திருமூலர் வருத்தப்படுவது இப்பாடலில் வெளிப்படையாகவே தெரிகிறது. மனிதர்கள் அறியாமை என்னும் வலையில் சிக்கி அதினின்றும் மீளமுடியாதபடி தவிக்கின்றனர். உடலையே உண்மையாகக் கருதி 'ஆன்மா'வை அறிந்து உணர முடியாமல் அவதிப்படுகிறோம். சிவனும், சீவனும் ஒன்றே என்று எண்ணினால் நமக்கு ஞானம் பிறந்து மெய்ப்பொருளை உணர, பக்குவம் ஏற்படும்.

வேதத்தில் சொல்லும் ''தத்துவமஸி'' என்பதின் கருத்தும் இது தான் தத்துவமஸி என்பதின் பொருள் ''அது நீயானாய்''. இதைத்தான் அன்னை எனக்கு உபதேசித்தாள் என்று இங்கு கூறுகிறார் திருமூலர். அன்னையே எல்லாவற்றிக்கும் தலைவி.

அவளே அனைத்துயிர்களுக்கும் தாய். ஒரு நல்ல சேய், ''தாய் சொல்லை தட்டாது.'' அதீத நல்ல சேயாக திருமூலர் நமக்கு காட்சி தருகிறார். நம்மையும் அவ்வழியில் செல்லுமாறு சொல்லாமற் சொல்கிறார்.

## 84. வினை துடைக்கும் வித்தகி

**ஆவின் கிழத்திநல் அவடு தண்துறை**
**நாவின் கிழத்தி நலம்புகழ்தேத்திடும்**
**தேவின் கிழத்தி திருவாஞ் சிவமங்கை**
**மேவும் கிழத்தி வினைகடிந் தாளே. 1122**

உயிர்கள் அனைத்திற்கும் உதவும் உரிமை உடையவளாக, திரு ஆ அடுதுறை என்னும் திருத்தலத்தில் எழுந்தருளிப்பவள். போற்றித் துதித்துப் பணிந்து பாடும் அன்பர் நாவில் உரிமையோடு வந்து தங்கியிருப்பவள். நன்மை பாராட்டிப் புகழும் தேவர்கள் தலைவி, பரம் பொருள் துணைவி, சிவப்பரம்பொருளின் சிந்தை இடம் கொண்ட நங்கை. இன்பதுன்ப வினைகளைத் துடைத்தருள் செய்தாளே!

அன்னையே தன்னுடைய இருவினையைத் தகர்த்து முக்தி தந்தருளியவள் என்று சொல்கிறார் திருமூலர். நாம் சதா சர்வகாலமும் அன்னையின் திருநாமங்களை பாராயணம் செய்து கொண்டிருந்தால் அன்னையும் ஆனந்தம் அடைந்து நம் நாவில் வந்து தங்கியிருப்பாள்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாமம் - 607. தேவேசீ: பிரம்மா, விஷ்ணு, சிவன் முதலிய தேவர்களுக்கெல்லாம் ஈஸ்வரி, பரம்பொருளான சிவபெருமான் அன்னையை எப்போதும் தன் சிந்தையில் வைத்திருப்பவர். அபிராமிபட்டர், அபிராமி அந்தாதியில் (14)

‘‘சிந்தையுள்ளே பந்திப்பவர் அழியாப் பரமானந்தர்...’’ என்று அருமையாகக் கூறுகிறார். அதாவது ‘‘தமது உள்ளத்தில் அன்னையை அன்பினாலே கட்டி இன்புறுகிறவர் அழியாத பரமானந்த சொரூபியான சிவபெருமான், குமரகுருபர முனிவரும் ‘‘எறிதரங்கம் உடுக்கும் புவனம் கடந்து நின்ற ஒருவன் திருவுள்ளத்தில் அழகு ஒழுக எழுதிப் பார்த்திருக்கும் உயிர் ஓவியமே’’ என்று பாடுகிறார்.

## 85. அன்னை தங்குமிடம் உயிர்களின் உள்ளம்

**கொங்குகீன்ற கொம்பின் குரும்பைக் குலாங்கன்னி**
**பொங்கிய குங்குமத் து ஒளி பொருந்தினள்**
**அங்குச பாசமெ னும் அகிலம் கனி**
**தங்கு மவள் மனை தான் அறிவாயே. 1177**

தேன் சிந்தும் மணமலர் நிறைந்த கொடி போலும் மெல்லிய இடை உடையவள். அழகிய இளமார்புடைய கன்னியவள். சிவந்து விளங்கும் குங்கும நிறங் கொண்ட திருமேனி உடையவள். அங்குச பாசங்களை அழகிய கைகளில் தாங்கியுள்ளவள் அவள். விரும்பித் தங்குமிடம், அவள் திருக்கோயில் கொள்ளும் இடம், இவ்வுலகத்து உயிர்களின் உள்ளமெனும் வீடே என்பதை அறிவாயாக.

(கொங்கு-தேன், குலாம்-குலாவும், குங்குமத்து-குங்கும நிறம், அகிலம்-உலகம், கனி-விருப்பம், மனை-வீடு, கோவில், இடம்)

சாதாரணமாக நம் வீட்டிற்கு யாராவது விருந்தினர் வருவதாக இருந்தால், நம் வீட்டை நாம் துப்புரவாக வைக்க முற்படுவோம். அகிலத்திற்கும் நாயகியான அன்னை சக்தியே நம் உள்ளங்களை தனது வீடாக கொண்டு தங்க விரும்பும் பட்சத்தில் நாம் நம் உள்ளங்களை தூய்மையாக வைத்துக் கொண்டு இருக்க வேண்டும் அல்லவா! உள்ளத்தை தூய்மையாக வைத்துக் கொள்வது என்பது அதிலுள்ள ஆணவம், கன்மம், மாயை என்று மூன்று மலங்களையும் நீக்குதல் ஆகும். நம் மனதை தூய்மையான தாமரை மலர் போல் ஆக்கவேண்டும். ஏனெனில் நம் தாய் வீற்றிருப்பது தாமரை மலர் மீது தானே! (பத்மாஸனா)

அபிராமிபட்டர், அபிராமி அந்தாதியில் (௯௦) ‘‘வருந்தா வகை என் மனத்தாமரையினில் வந்து புகுந்து இருந்தாள் பழைய இருப்பிடமாக’’ என்று அருமையாகக் கூறுகிறார்.

நம் அன்னை நம் மனதில் வந்து தங்குவதற்கு நாம் எப்போதும் தயாரான நிலையில் இருக்கவேண்டும் என்பதைத்தான் திருமூலர் குறிப்பிடுகிறார்.

## 86. கள்ளப் புலன்களை களைபவள்

**உள்ளத்தினு ள்ளே உடனிருந் தைவர்தம்**
**கள்ளத்தை நீக்கிக் கலந்துடனே புல்கிக்**
**கொள்ளத் தவநெறி கூடிய இன்பத்து**
**வள்ளற் றலைவி மருட்டிப் புரிந்தே. 1183**

உடம்போடும் மனத்தோடும் கூடவே இருக்கின்ற மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து பேர்களின் கள்ளத்தனத்தை - அதாவது மனதை நல்வழிச் செல்ல விடாது ஆசை காட்டி தம்வழிச் செலுத்துகின்ற திருட்டுத்தனத்தை விட்டு விலகச் செய்து, என் உள்ளத்திலே பொருந்தி என்னைத் தன்பால் இழுத்துக் கொண்டு, தவநெறி நான் மேற்கொள்ளச் செய்து, அது தரும் இன்பத்தில் என்னை மயங்கி இருக்கச் செய்தாள், உயிர்களுக்கெல்லாம் அருளை வாரி வழங்கும் வள்ளண்மை மிக உடைய பராசக்தி. (புல்கி - தழுவிய, மருட்டி - மயங்கச் செய்து)

சென்ற பாடலில் நாம் நம் மனதை மாசற்றதாக வைத்துக் கொள்ள வேண்டிய அவசியத்தைப் பார்த்தோம். இதையும் அன்னையே செய்து அருளுபவள் என்கிறார் திருமூலர் இப்பாடலில். நம் மனம் மாசுபடுவதற்குக் காரணம் அது புலன்களின் வழியே செல்லுவதால். புலன்கள் வஞ்சனை செய்வதால் ''கள்ளப் புலன்கள்'' என்று கூறப்படும் மனம் புலன்களின் வழி செல்லாமல் தடுத்துக் காப்பவள் அன்னை. 'என்னே! அன்னையின் கருணை. (அவள் ஸ்ரீமாதா அல்லவா!) 326. கருணா ரஸ ஸாகரா - கருணைக்கடல்!

ஔவைப் பாட்டியார், விநாயகர் அகவலில் ''ஐம் புலன் தன்னை அடக்கும் உபாயம் இன்புறு கருணையின் இனிதெனக்கருளி.'' என்று சொல்லுவதும் காண்க.

''அன்னைதான் அனைத்தையும் செய்பவள்'' என்று சொல்கிறார் திருமூலர். (அதாவது - ''எல்லாம் அவள் செயல்''

## 87. எல்லையில்லா இன்பம்

**இருந்தனள் ஏந்திழை என்னுள மேவித்**
**திருந்து புணர்ச்சியில் தேர்ந்துணர்ந் துன்னி**
**நிரந்தர மாகிய நிரதி சயமொடு**
**பொருந்த விலக்கிற் புணர்ச்சி அதுவே. 1185**

அலங்கார வல்லியாக அன்னை பராசக்தி என்னுள்ளத்தின் உள்ளே தங்கி இருந்தனள். உயிர்கள் எல்லாம்.. இறைவன் திருவடி நினைவாகிய எல்லையில்லாத பேரின்பத்தில் ஒன்றி என்றும் மகிழ்ந்திருக்கப் பரம்பொருளோடு பராசக்தி பொருந்தி இருக்கிறாள். இதுவே பிரிவில்லாத பேரின்பக் கலப்பாகும்.

(ஏந்திழை - அழகிய ஆபரணங்கள் அணிந்தவள். மேவி - தங்கி. உன்னி - நினைத்து நிரந்தரம்- நிலையான நிரதிசயம் - வியத்தகு இன்பம்).

இப்பாடலில் திருமூலர், சிவனுடன் ஒன்றிய சக்தியாக, அன்னை அவர் உள்ளத்தில் புகுந்து பேரின்ப பெருவெள்ளத்தில் அவரை ஆழ்த்தினாள் என்ற களிப்பில் காட்சி தருகிறார். இது வரையிலும் அன்னை அவர் உள்ளத்தில் வந்து இருந்ததைச் சொல்லி இங்கு, அவள், எப்போதுமே பரம்பொருளை விட்டுப் பிரியாதவளாகச் சொல்வது சிந்திக்கத்தக்கது. அதாவது ''சக்தியின்றி சிவனில்லை'', ''சிவனின்றி சக்தியில்லை.''

அபிராமிபட்டர் அபிராமி அம்மை பதிகத்தில் ''அமுதீசர் ஒரு பாகம் அகலாத சுகபாணி' என்று இக்கருத்தை வலியுறுத்துகிறார். ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம். 999. சிவசக்தியைக்யரூபிணீ - சிவனும் சக்தியுமாக ஒன்றாக இருப்பவள். அதாவது விளக்கும் ஒளியும் போல், சூர்யனும் உஷ்ணமும் போல பால சந்திரனும் குளிர்ச்சியும் போல, சொல்லும் பொருளும், போல சக்தியானவள், ''சிவசக்தியாக'' இருப்பவள். 970. ஸுவாஸினீ எப்போதும் (ஒரு க்ஷணமும் பிரியாமல்) பதியுடன் கூடி வாழ்பவள்.

## 88. சடங்குகள் வேண்டாம்! சக்தியை நினை !

**சடங்கது செய்து தவம் புரிவார்கள்**
**கடந்தனில் உள்ளே கருதுவர் ஆகில்**
**தொடர்ந்தெழு சோதி துணைவழி ஏறி**
**அடங்கிடும் அன்பினது ஆயிழை பாலே. 1192**

புறச் செயல்களான விரதம், வேள்வி போன்ற சடங்குகளை மட்டும் செய்து தவம் செய்பவர்கள், அவற்றை விட்டு விலகி, மனத்துக்குள்ளே இறைவன் குடி கொண்டிருப்பதை நினைத்துப் பார்ப்பார்களே ஆனால், மூலாதாரத்தில் தோன்றி வளரும், சோதிச் சுடர் ஒளியைப் பற்றி மேலே செல்ல, மனம் அடங்கி, அன்னையின் அருளன்பில் கலந்து மகிழ்ந்திருக்கும். (சடங்கு - புறச்செயல்கள், கடந்து-விலக்கி, கருதுதல்-நினைத்தல் துளை - உச்சித் தொளை, உள் நாக்கு. ஆயிழை - அழகிய அணிகலன்கள் பூண்ட பெண் - சக்தி.)

இப்பாடலில் ஆன்மீக மக்களுக்கு திருமூலர் ஒரு அருமையான கருத்தை உபதேசிக்கிறார். ஆன்மீகத்தில் உச்சநிலையில் இருக்கும் சிலர் வேள்வி யாகம் போன்றவற்றிற்கு முக்யத்வம் தந்து, உள்ளத்திலேயே இருக்கும் பரம்பொருளை மறந்து விடுகின்றனர். ''கடவுள்'' என்ற சொல், ஆண்டவன் நம் உள்ளேயே இருப்பதைக் குறிக்கும். மலங்களை நீக்கி, மனதில் அன்னையை தியானிப்பதுதான் சிறந்த, எளிமையான, பயனுள்ள வழியாகும் என்பதைத் தான் திருமூலர் உலகோர்க்கு உணர்த்துகிறார்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் இக்கருத்தினை வெகு அழகாகச் சொல்லுகிறது. 870.அந்தர்முக ஸமாராத்யா - உள் நோக்கு உள்ளவர்களால் நன்கு ஆராதிக்கக் கூடியவள். உள் நோக்கி உபாஸிப்பதை ஸ்ரீமத் பகவத்கீதையிலும் ஸ்ரீபகவான் தெளிவாக உபதேசிக்கிறார். நவாவரண பூஜா பத்ததியிலும் உள்நோக்கி உபாஸிப்பது-பரா, மிகவும் சிறந்தது எனக் காண்கிறோம்.

## 89. எங்கும் அலையவேண்டாம்

**மேலாம் அருந்தவம் மேன்மேலும் வந்தெய்தக்**
**காலால் வருந்திக் கழிவர் கணத்திடை**
**நாலாம் நளினம் நின்று ஏத்தி நட்டுச் சிதன்**
**மேலாமெ ழூத்தின் ஆமத்தி னாலே. 1212**

மேலான அரிய தவ முயற்சிகளும் அதன் பயன்களும் மேலும், மேலும் பெருக நினைக்கும், அறியாமை வயப்பட்ட மக்கள், காடும் மலையும், கடலும், ஆறும், ஊரும், நகரமும், நாடும் என்று உடல் வருந்தக் காலால் நடந்து கருத்தழிந்து வீணாக வாழ்வைக் கழிப்பர். இது பயனற்ற பாதை.

மேலான தவப் பயனை நொடியில் அடையும் வழி ஒன்று உள்ளது. அது என்ன எனில், மூலாதாரமாகிற நான்கிதழ் கொண்ட தாமரை இதழில் பொருந்தியுள்ள அன்னை பராசக்தியை எண்ணி ‘ஓம்’ என்னும் பிரணவத்தை ஓத, உச்சி நடுவில் அவள் விளங்கப் பெறுவாள். இவளைக் காண்பதுவே தவம். இதை விட வேறு தவப் பயன் ஏது? என்பதே இந்தப் பாடலின் சாராம்சம்.

(கணத்திடை - நொடிப் பொழுதில், நாலா நளினம் - நான்கிதழுடைய மூலாதாரம். மேலாம் எழுத்தும் என்னும் பிரணவம் - ஓம் என்னும் பிரணவம். ஆமத்தினாள் - அன்னமய கோசத்தில் விளங்குபவள்)

அருளாளர்கள் பலரும் போதிப்பது அன்னையைக் குறித்து மௌன நிலையில் தவமிருப்பது தான். அபிராமிபட்டர், அபிராமி அந்தாதி (48) ‘‘பரிமாப் பச்சைக் கொடியைப் பதித்து நெஞ்சில் இடரும் தவிர்த்து இமைப்போதிருப்பார்’’ என்று கூறுவதும் காண்க. அருணகிரிநாதரும், ‘‘சும்மா இரு! சொல் அற!’’ என்பார்.

# 90. அன்னையின் அருள் மழை

**தாரத்தினு ள்ளே தங்கிய சோதியைப்**
**பாரத்தினு ள்ளே பரந்துள் எழுந்திட**
**வேரது வொன்றிநின்று எண்ணும் மனோமயம்**
**காரது போலக் கலந்தெழு மண்ணிலே 1405**

உள்ளத்துள்ளே இருந்து எழுகின்ற உள் ஒளியை, 'ஓம்' என்னும் பிரணவ தியானத்துடன் உயிர்க்குப் பாரமாகிய உடம்பில் எங்கும் பரந்து நிற்கத் தியானம் செய்து, இதைவிட்டால், இந்த உயிர்க்கு உற்ற துணை வேறில்லை, இதுவே இறையின்பத்திற்கு வேர் என்று எண்ணுகிற மனத்திடம் (மனோமயம்) வந்து விட்டால் அன்னையின் அருள் மழை மேகம் மண்ணைக் குளிர்விப்பதைப் போல் மனதை மகிழ்விக்கும், குளிர்விக்கும்.

மேகம் மண்ணில் உள்ள ஆறு, கடல் போன்ற நீர்நிலைகளில் இருந்து நீரை முகந்து சென்று மேகமாகக் கறுத்து, மீண்டும் மண்ணுக்கே மழை தருவது போல, அன்னை, ஆன்மாக்களின் உள்ளே இருந்து வெளிப்படுகிறாள். பின் தான் உள்ளிருந்த உயிர்களுக்கு அருளவும் செய்கிறாள். இதுவே ''காரது போலக் கலந்தது மண்ணிலே'' என்ற அழகிய உவமையானது.

அன்னை பஞ்ச பூதங்களாக நிலம், நீர் நெருப்பு, காற்று, ஆகாயமாக அண்டத்திலும் பிண்டத்திலும் இருப்பதை இப்பாடல் உணர்த்துகிறது. நிலம் மேல் உள்ள நீர் உஷ்ணத்தினால் நீராவியாக மாறி ஆகாயத்தினால் மழையாக நிலத்திற்கே திரும்பும். இது இப்பாடலின் உட்கருத்தாகும். அது போல அன்னையின் அருளும் நம்மிடமே நிற்கும்.



## 91. அன்னை அமுதமே உருவானவள்

**என்றங்கு இருந்த அமுத கலையிடைச்**
**சென்றங்கு இருந்த அமுத பயோதரி**
**கண்டங் கரமிரு வெள்ளி பொன் மண்ணடை**
**கொண்டங் கிருந்தது வண்ணம் அமுதே. 1407**

கண்ணுக்குள் விளங்கக் காட்சிதரும் அன்னை புருவ நடுவில் அமுது ஊற்றாகப் பொழிகிறாள். (அமுத பயோதரி) இப்படி அமுதைப் பொழிபவள் கழுத்து வெண்ணிறமானது. திருக்கரங்கள் பொன்னிறமானவை. ஒரு கையில் மண்ணாலான கமண்டலம் ஏந்தி இருக்கிற அன்னை சக்தி அமுதமே உருவானவள். (கண்டம் - கழுத்து).

அருளாளர்களுக்கு அன்னையின் நினைப்பும், வடிவமும் அமுதத்தைப் போன்று இனிக்கும். அபயாம்பிகை பட்டர் அபயாம்பிகை சதகத்தில் (5) ''தேனே பாலே சருக்கரையே தெவிட்டா அமுதே'' என்று அன்னையைப் புகழ்கிறார். வேதமும், ''மஹத்யைவா ஏதத்தேவதாயை ரூபம் யன்மது'' என்று கூறுகிறது. அதாவது அன்னை தேன் போன்ற வடிவமானவள், உலகிலுள்ள அத்தனை இனிப்புப் பண்டங்களும் ஒரு அளவிற்கு மேல் திகட்டி விடும்? ஆனால் அன்னையோ தெவிட்டாத அமுதம்!

அபிராமிபட்டர், அபிராமி அந்தாதியில் (24) ''அமரர் பெரு விருந்தே'' என்று சொல்லுகிறார். தேவர்களுக்கு மோகினி வடிவில் தோன்றி அமுதளித்தவள் அன்னையே என்பதே இதன் உட்பொருளாகும்.



## 92. சொல்லால் விளக்க முடியாது

**குத்து முலைச்சி குழைந்த மருங்கினள்**
**துத்தி விரிந்த சுணங்கினள் தூமொழி**
**புத்தகச் சீறடிப் பாவை உணர்வினைத்**
**தொத்த கருத்துச் சொல்லகி லேனே. 1163**

அழகிய மார்பகங்களை உடையவள். அசையும் சிற்றிடை கொண்டவள். தேமல் படர்ந்த திருமேனி உடையவள். அற-உரை, அன்பு மொழி பேசுபவள். மயிலிறகு போன்ற மென்மையான, மெய்யுணர்வூட்டும் திருவடிகளைக் கொண்டவள். இப்படிப்பட்டவள் ஆருயிர்களோடு ஒன்றிக் கலந்து நிற்கும். அருட்திறத்தை சொல்லால் விளக்கி சொல்ல முடியாதவனானேன். (குத்து - குதிர்ந்த குழைந்த அசையும் மருங்கு - சிறிய இடை துத்தி - புள்ளி சுணங்கு - தேமல் தூமொழி - அன்பு மொழி அறச் சொல், தொத்த-தொகுத்த, கருத்தது. அருட்செயல் சொல்லகிலேன் - சொல்ல இயலாதவனானேன்).

புத்தகம் என்ற சொல்லுக்கு அறநூல், சித்திரம், மயிலிறகு என்று பல பொருள்கள் உண்டு. ஞானத் திருவடி, மெய்யுணர்வைக் குறித்த ஆகு பெயர் எனக் கொள்வது பொருந்தும்.

இப்பாடலில் திருமூலர் ஒரு சீரிய கருத்தைச் சொல்லுகிறார். அன்னையின் திருவடி தன் அன்பர்களுக்கு ஞானத்தைத் தரவல்லது என்பதே. அன்னையின் அருட்திறத்தை யாராலும் சொல்ல முடியாது என்பதையும் உலகோர்க்கு உணர்த்துகிறார்.



## 93. அன்னையின் ஞானக் குழந்தைகள்

**கண்ணுடை யானைக் கலந்தங்கு இருந்தவர்**
**மண்ணுடை யாரை மனித்தரிற் கூட்டொணப்**
**பண்ணுடை யார்கள் பதைப்பற்று இருந்தவர்**
**விண்ணுடை யார்களை மேலுறக் கண்டே 1166**

நெற்றிக் கண் உடைய பராசக்தியைச் சேர்ந்திருக்கின்ற ஞானசித்தி பெற்ற பெருமைக்குரிய பெரியோர்கள், மண்ணுலகில் வாழ்கின்ற சாதாரண மனிதர்களுடன் வைத்தெண்ணப்பட முடியாத அருட் சக்தி பெற்ற சீலர்கள் ஆவர். அவர்கள் மனிதரில் உயர்ந்த மா-தவச் செல்வர். அவர்கள் சிந்தை தடுமாறாதவர்கள், இறைவியின் நினைவைத் தவிர வேறு செயலற்றிருந்தவர்கள். அவர்கள் வானுலகத் தேவர்களையும் தம் ஞானக்கண் கொண்டு கண்டிருப்பர்.

(மண் உடையார் - பெருமை உடையவர்கள், பண்ணுடையார்கள்-பாராட்டுதலுக்குரிய பெரியோர்கள், பதைப்பற்ற மனம்-தடுமாறாத விண்ணுடையார் - வானுலகத் தேவர்கள்.

சென்ற பாடலில் அன்னையின் திருவடிகள் ஞானத்தைத் தருவதைப் பார்த்தறிந்தோம். அவ்வாறு ஞானம் பெற்றவர்களின் பெருமையை இப்பாடலில் திருமூலர் கூறுகிறார்.

அன்னையை இப்பாடலில் ‘‘நெற்றிக்கண்’’ உடையவளாகச் சித்தரித்திருப்பது சிந்திக்கத்தக்கது. நெற்றிக்கண் ஞானத்தைக் குறிக்கும். சிவனுக்கும் சக்திக்கும் பொருந்தும். அர்த்தநாரீஸ்வரர் திருக்கோலத்தில் நெற்றிக்கண் இருவருக்கும் உடையதாகின்றதல்லவா!

மற்றும் திருமூலர் இப்பாடலில் அன்னை அருளாளர்களின் பெருமையைப் போற்றுவது அடியார்களிடம் அவர் கொண்ட மதிப்பும் மரியாதையும், அன்பினினையும் காட்டுகிறது.

## 94. மன இருள் போக்கும் மகா சக்தி

**விளங்கொளி யாய விரிசுடர் மாலை**
**துளங்கு பராசத்தி தூங்கிருள் நீங்கத்**
**களங்கொள் மணியுடன் காம விநோதம்**
**உளங்கொள் இலம்பியம் ஒன்று தொடரே. 1246**

அழகிய மணம் வீசும் மலர் மாலையும் (விளங்கொளியாய மாலை) ஒளி வீசும் மணிமாலையும் (விரிகூடர் மாலை) அணிந்து விளங்குகிற அன்னை பராசக்தி, சீவன்களின் மன இருளைப் போக்கப் பரம்பொருளோடு கலந்து நிற்கிறாள். நீயும் மூலாதாரத்தில் எழும் நாதத்தைத் தொண்டைத் தொளை உள் நாக்குள் மேல் நோக்கிச் செலுத்த முயல்வாயாக! இறைவி பராசக்தி நினைவால் தியானத்தால், மனதில் காமவிகாரம் நீங்கப் பெற்று மேல் நிலை அடையலாகும் என்பது கருத்து.

(களம் - கழுத்து. இலம்பியம் - உள் நாக்கு)

இப்பாடலில் திருமூலர் அன்னையை நாத சப்த வடிவாகக் காண்கிறார். நம் உடலில் எழும் ஓசைக்கு மூல காரணமாக இருப்பவள் அன்னை என்று அவர் சொல்வது ஆழ்ந்த கருத்தையுடையது. பாரதியாரும், ''நாத வடிவானவளே நல்ல உயிரே கண்ணம்மா'' என்று அருமையாகச் சொல்கிறார்.

நம் உடம்பில் மூலாதாரத்தில் எழும் ஓசை (பரா) அசைவற்று இருக்கிறது நாபிக்கு அருகில் எழும்பும் போது 'பச்யந்தீ' என்று கூறப்படுகிறது. இருதயத்திற்கு வரும் போது மத்யமா'' என்று பெயர், வாயின் மூலமாக வெளிவரும் போது 'வைகரீ'' எனப்படுகிறது. இவற்றை நாம் லலிதா ஸஹஸ்ரநாமத்தின் வாயிலாக அறிகிறோம். ரிக் வேதமும், வாக் நான்கு நிலைகளை உடையது. அறிவிற் சிறந்தவர்கள் இதை அறிவார்கள். முதல் மூன்று நிலைகள் ரகசியமாகவும் அசைவில்லாமலும் உள்ளன. மனிதர்கள் நான்காவது நிலையான வாக்கைப் பேசுகிறார்கள் என்று கூறுகிறது

## 95. பரம் பொருளிடம் சேர்க்கும் சக்தி

**மாயம் புணர்க்கும் வளர்சடை யானடி**
**தாயம் புணர்க்குஞ் சலந்தி அமலனைக்**
**காயம் புணர்க்குங் கலவியுள் மாசத்தி**
**ஆயம் புணர்க்குமவ் வியோனியுமாமே 1249**

ஆருயிர்களை மாயையில் கூடவைக்கும் விரிசடை உடைய பரம்பொருளின் திருவடி அருளுடன் சேரச் செய்யும் காரியத்தைச் செய்பவள் அன்னை. கங்கையை, இளம்பிறையைத் தலையிலே சூடிய புனிதமான, மலங்களற்ற பரம் பொருளை உயிர்களுக்கு இடமான வினைப் பயனுக்குத் தகுந்ததான உடம்பெடுக்க உதவுகிறாள்.

இவை எல்லாம் உலக உற்பத்தியும் இயக்கமும், அருள் வேட்கும் திருவடித் தேடல்களும் ஆகிய எல்லாமே அன்னையின் அருட் செயற்களால் நிகழ்பவையே. (தாயம் - சேர்க்கும். சலநதி - கங்கை காயம் - உடம்பு - கலவி - போகம், ஆயம் - கூட்டம், யோனி-காரணம்)

அன்னை பராசக்தி இம்மண்ணுலகில் சீவர்களைப் படைத்து இயக்குபவள். சீவர்களுக்கு உயிரளித்து அவர்களின் இருவினைக்கு ஏற்ப, தகுந்த உடலும் அருளுகிறாள். அத்துடன் நில்லாது ஆன்மாக்கள் இறுதியில் பரம் பொருளின் திருவடியில் சேர உதவுகிறாள்.

அதாவது அன்னைதான் எல்லாவற்றிற்கும் காரண காரியமாய் இருப்பவள் என்பதை வெகு நேர்த்தியாக திருமூலர் உலகோர்க்கு சொல்கிறார். ‘‘அவளின்றி அணுவும் அசையாது’’.

## 96. வித்தக ஞான தலைவி

**முத்து வதனத்தி முகந்தொறு முக்கண்ணி**
**சத்தி சதுரி சகளி சடாதரி**
**பத்துக் கரத்தி பராபரன் பைந்தொடி**
**வித்தகி என்னுள்ள மேவிநின் றாளே. 1194**

முத்துப் போன்ற முகம் உடையவள். சூரியன் சந்திரன், அக்கினி மூன்றையும் மூன்று கண்களாகக் கொண்டவள் ஆற்றல் மிக்கவள். (சக்தி). திறம் மிக்கவள் (சதுரி) அருள் பாலிக்கும் திருமேனி உடையவள். (சகளி) விரிந்த சடைமுடி - உடையவள் (சடாதரி) பத்துக் கைகள் உடையவள். பரம்பொருளின் இடப் பாகம் கொண்டவள். ஞானத் தலைவி (வித்தகி) அவள் என்னுள் பொருந்தி இருந்தாள். (வதனம் - முகம் கரம் -கை).

அன்னையின் வடிவழகையும், ஆற்றலையும் எண்ணி மகிழ்கிறார் திருமூலர். அன்னை அழகுடன், அளவிலா ஆற்றல் படைத்தவள். அறிவின் பெட்டகம். ஞானக்களஞ்சியம், ஞானத் தலைவி. அவளே இம்மண்ணுலகில் சீவர்களுக்கு உயிரும், உடலும் தந்து பின்னர் அறிவு ஆற்றல் ஞானம் ஆகியவற்றை அருள்பவள். ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் - 979 ஞான முத்ரா - ஞான முத்ரையின் ரூபமாக இருப்பவள். இதுவே சின் முத்ரை எனப்படும். வலதுகை ஆள்காட்டி விரல் கட்டைவிரல் நுனிகளைச் சேர்ப்பது - சின் முத்ரை ஸ்ரீதக்ஷிணாமூர்த்தி சின் முத்திரையைக் காட்டி சீடர்களுக்கு ஞானோபதேசம் செய்தாராம். 980 ஞான கம்யா - ஞானத்தால் அடையப்படுபவள். 644. ஞான விக்ரஹா - ஞானமே வடிவானவள். 643-ஞானதா-ஞானத்தைக் கொடுப்பவள்.

அதாவது ஞானத்தலைவியான அன்னை என்னுள் பொருந்தி இருந்தாள் என்று திருமூலர் பெருமிதத்துடன் கூறுகிறார்.

## 97. உள் ஒளியாய் நிற்பவள்

**மேவிய மண்டலம் மூன்றுடன் கீழெரி**
**தாவிய நற்பதத் தண்மதியம் கதிர்**
**மூவரும் கூடி முதல்வியாய் முன்நிற்பார்**
**ஓவினும் மேலிடும் உள்ளொளி யாமே. 1195**

மூன்றாக அமைந்துள்ள மண்டலங்கள் : சூரிய மண்டலம், சந்திர மண்டலம், அக்கினி மண்டலம். இந்த மூன்றுக்கும் உரிய கடவுளர்கள் சூரியன், சந்திரன், அக்கினி என்னும் மூவர். இம் மூவரும் அன்னை சக்தியின் ஆணைக்குட்பட்டு, அவள் முன் நிற்பர்.

நாம் கண்களை மூடிக் கொண்டாலும் நம் உள் ஒளிவிட்டுத் திகழும் உள் ஒளி அன்னையாகும். (கீழெரி - கீழிலிருந்து மேலோங்கிச் சுடர் விடுவது, நெருப்பு -அக்கினி. தாவிய நற்பதம் - ஆகாயம் (ஆகாயத்திலுள்ள சூரியன், சந்திரன்) ஓவினும் - கண்ணை மூடிக் கொண்டாலும்.)

உலகத்திற்கு ஒளி தரும் பொருள்கள் மூன்று. சூரியன், சந்திரன், அக்கினி இவை ஒளி தருவதற்கு மூல காரணமாய் இருப்பவள் அன்னை சக்தியே. அத்துடன் நில்லாது அன்பர்களின் உள்ளங்களிலும் அணையா சோதியாய் விளங்குபவள் அன்னையே என்றுரைக்கிறார் திருமூலர்.

திருக்கடவூர் வாழ்ந்த அபிராமிபட்டர் அன்னையை தன் உள்ளத்தில் பௌர்ணமியாகக் கண்டதால் தானே மன்னன் சரபோஜி, ''இன்று என்ன திதி'' என்று கேட்டபொழுது ''பௌர்ணமி'' என்று சொன்னார். அபிராமி அந்தாதியில், (82) ''அளியார் கமலத்தில் ஆரணங்கே அகிலாண்டமும் நின் ஒளியாய் நின்ற ஒளிர் திருமேனியை உள்ளுந்தொறும் களியாகி'' என்று ஆனந்தக் களிப்பில் பாடுகிறார்.

## 98. அருளே வடிவானவள் அன்னை

**அளியார் முக்கோணம் வயிந்தவந் தன்னில்**
**அளியார் திரிபுரையாம் அவள்தானே!**
**அளியார் சதாசிவமாகி அமைவாள்**
**அளியார் கருமங்கள் ஐந்து செய்வாளே 401**

அளி - கருணை, அளியார் முக்கோணம் வயிந்தவம் தன்னில் - கருணை ததும்பும் முக்கோண வடிவான பீடத்தில் மையப் புள்ளியில் கருணை புரியும் மகாசக்தி அவளே. அந்த சக்தியே ''அருள் வழங்கும் சதாசிவமாகவும் வீற்றிருப்பாள். அவளே படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளுதல் ஆகிய ஐந்து காரியங்களையும் செய்பவளுமாவாள். (வயிந்தவம் - ஸ்ரீ சக்ரத்தில் உள்ள நாற்பத்து மூன்று கோணத்தில் நடுவில் உள்ள புள்ளி. திரி-மூன்று. புரை - வசிப்பவள், திரிபுரை - சூரிய, சந்திர, அக்கினி மண்டலங்களின் தலைவி, கருமம் காரியம், தொழில்).

திருமூலர் இப்பாடலில் ஸ்ரீவித்யா உபாசனையில் முக்ய அங்கமாய் விளங்கும், 'ஸ்ரீசக்ரத்தை' ஒரு கோடிட்டு காண்பிக்கிறார். ஸ்ரீசக்கரம்: பிந்து மையப்புள்ளி, முக்கோணம் எட்டுக்கோணம், இரண்டு பத்து கோணங்கள், பதினாலு கோணம், எட்டுத்தளம் பதினாறு தளம். மூன்றுவட்டம், மூன்று கோட்டுப் பூபுரம் ஆகியவற்றால் ஆனது. இந்த ஸ்ரீசக்கரத்தையே மூன்று பரிமாணங்கள் உள்ளவிதமாகச் செய்தால் அது 'மேரு' எனப்படும். அனைத்துச் சக்கரங்களிலும் அன்னையின் சக்கரம் உயர்வாகப் போற்றப் படுவதால் அதற்கு ஸ்ரீசக்கரம் என்று பெயர் ஸ்ரீசக்கர வழிபாடு செய்பவர்களுக்கு '-மறுபிறவி இல்லை' என்பது திண்ணம் என்று சான்றோர்கள் கூறுவர். ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் -274. பஞ்சக்ருத்ய பராயணா - மேலே கூறிய ஐந்து தொழில்களில் ஈடுபட்டவள். 272 ஸதாசிவா - சதாசிவனாயிருப்பவள்.

## 99. பிரணவ வடிவானவள்

**வாரணி கொங்கை மனோன்மணி மங்கலி**
**காரணி காரிய மாகக் கலந்தவள்**
**வாரணி ஆரணி வானவம் மோகினி**
**பூரணி போதாதி போதமு மாமே 402**

வார் - மார்புக்கச்சு. வாரணி கொங்கை - கச்சணிந்த சூரிய, சந்திரர்களைத் தனங்களாகக் கொண்ட மகாசக்தியாகிய மனோன்மணி; மங்கலி-மங்கள சொருபமானவள்.காரணி - எல்லா இயக்கங்களுக்கும் காரணமானவள். காரியமாகக் கலந்து நிற்பவள். படைப்புத் தொழில் காரணமாக பிரமனுடனும், காக்கும் தொழிலுக்காக விஷ்ணுவுடனும், அழிக்கும் தொழிலுக்காக ருத்ரனுடனும் கலந்திருப்பவள்.

வாரணி - வாரணம் என்றால் யானை, (யானையை ஞானத்தின் ''ஓம்'' எனும் பிரணவமாகச் சுட்டுவது மரபு. அதாவது ஓம் என்னும் பிரணவ வடிவானவள்.

ஆரணம் - வேதம். ஆரணி - அவள் வேதப் பொருளாகவும் (வானவர்) மோகினி-தேவர்கள் போற்றும் தேவ தேவியாகவும், பூரணி- முழுமையாகவும், ஞான விளக்கங்கள் யாவற்றிற்கும் மேலான ஞான சக்தியாகவும் திகழ்கிறாள் (போதம் ஞானம். பூரணம் - குறையில்லா நிறைவு, முழுமை)

அபிராமி பட்டர், அபிராமி அந்தாதியில்(20) அன்னையை ''பூரணாசல மங்கலையாகக்-'' காண்கிறார். ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் - 292. பூர்ணா - நிறைந்தவள். காலம்,தேசம் வஸ்து இவற்றால் கட்டுப்படாதவள். அன்னை எங்கும் எதிலும், எப்போதும் நிறைந்திருப்பவள். ப்ரஹ்மத்தின் வடிவிலான தேவி. கேனாபநிஷத் ''அன்னை ப்ரஹ்மத்தை இந்திரனுக்கு உபதேசம் செய்தாள்'' என்று கூறுகிறது

## 100. காலத்தை வெல்லும் சக்தி

**ஒன்றது ஆகிய தத்துவ நாயகி**
**ஒன்றது கால்கொண்டு ஊர்வகை சொல்லிடில்**
**ஒன்றது வென்றிகொள் ஆயிரம் ஆயிரம்**
**ஒன்றது காலம் எடுத்துளும் முன்னே 698**

தத்துவங்கள் பலவானாலும், தோற்றங்கள் பலவாக இருந்தாலும் உலகத் தலைவியாகிய ஆதி சக்தி ஒன்றே. இந்த சக்தி உயிர்ப்புச் சக்தியாகிய பிராணனைச் சேர்ந்து உடல் ஊர்ந்து செல்கின்ற விதம் எப்படிப்பட்டது என்றால், உள்ளத் தாமரையில் ஒன்றும் உணர்வாக, ஆன்மாக்களை ஆண்டு, ஆட்சி செலுத்தி ஆயிரம் ஆயிரம் ஆண்டுகள் அருளாட்சி செலுத்தி வருகிறது. இந்த ஒரு சக்தியான ஆதிசக்தியே காலத்தைக் கடக்க உதவும் யோகத்துக்கும் ஆதாரம், முதல் துணையாகும். (உளும் - போக்கும், வெல்லும் எடுத்துருளும்-காலத்தை வெல்லும்)

இங்கு திருமூலர் ''ஆயிரம் ஆயிரம்'' என்றும் இருமுறை கூறுவது - எண்ணில் அடங்காத எண்ணைக் குறிக்கும். அதாவது ஆதிசக்தி புராதனமானவள், எல்லாவற்றிற்கும் முதன்மை - பெற்றவள் என்பதே பொருள். அவள் உதவியினால் மட்டுமே காலத்தை வெல்ல முடியும். திருக்கடவூரில் காலனுக்கும் காலனாக இருப்பதை முன்னும் பார்த்தோம்.

அன்னை வெவ்வேறு விதமாக காட்சிகள் அளித்தாலும், தோற்றங்கள் எடுத்தாலும் அவள் தனித்தியங்கும் சக்தி பெற்றவள். இதைத் தான் ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் 623.கேவலா என்று சொல்லுகிறது. அதாவது தனித்த வடிவினள். வேறு எந்த குணமோ தோஷமோ கலக்காமல் தானாக இருப்பவள்.



## 101. அறிந்து அன்னையின் அருள் பெறுக

**ஒளிக்கும் பராசக்தி உள்ளே அமரில்**
**களிக்கும் இச் சிந்தையில் காரணங் காட்டித்**
**தெளிக்கு மழையுடன் செல்வம் உண்டாக்கும்**
**அளிக்கும் இவளை அறிந்து கொள்வார்க்கே. 1345**

ஒளிமயமாகப் பிரகாசிக்கின்ற பராசக்தி உள்ளத்துள்ளே வந்து இடம் கொண்டால், உள்ளம் பேரானந்தத்தில் பெருமகிழ்ச்சியில் திளைக்கும். அந்த உள்ளம் அறிய உண்மைப் பொருள் உணர்த்தும். பிறவித்துயர், வினைத்துன்பம் இவற்றிற்கான காரணத்தையும், அதைப் போக்கிக் கொள்ளும் வழியையும் காட்டித் தெளிவடையச் செய்யும். கருணை மழை பொழியும். நவநிதிச் செல்வமும் வந்து சேரும்.

எனவே இவற்றை எல்லாம் அருளுகின்ற கருணைக் கடலான அன்னையை உணர்ந்தறியுங்கள். அவளை உங்கள் உள்ளத்தினுள்ளே வந்து குடியிருக்கச் செய்யுங்கள். (அமரில் - அமர்ந்தால். களிக்கும் - மகிழ்ச்சி அடையும். தெரிக்கும் - அறியச் செய்யும்).

இப்பாடலில் திருமூலர் உலகோர்க்கு ஒரு அருமையான செய்தியைக் கூறுகிறார். அதாவது சீவர்கள், அன்னை நம் உள்ளத்தில் அமர்ந்தால் பேரின்ப பேறு கிடைக்கும் என்பதை முதலில் உணர்ந்து கொள்ள வேண்டும் என்பதின் அவசியத்தை வலியுறுத்துகிறார். அவ்வாறு உணர்ந்தால் நாம் நிச்சயமாக அன்னை நம் உள்ளத்தில் அமருவதற்கு வேண்டிய மார்க்கத்தைத் கடைப்பிடிப்போம் அல்லவா! இதைத்தான் அபிராமிபட்டர், அபிராமி அந்தாதியில் முதற்பாடலிலேயே ''உணர்வுடையோர் மதிக்கின்ற மாணிக்கம்'' என்று கூறுகிறார்.

## 102. மந்திர ஒலியாக இருப்பவள்

**அண்டத்தின் உள்ளே அளப்பரி தானவன்**
**பிண்டத்தின் உள்ளே பெருவெளி கண்டவள்**
**குண்டத்ன் உள்ளே குணம்பல காணினுங்**
**கண்டத்தில் நின்ற கலப்பு அறியார்களே. 1362**

அண்ட கோளங்கள் அனைத்தினுள்ளும் பொருந்தி நிற்பவள். அளப்பரிய ஆற்றலுடையவள், (அவள் ஆற்றலை யாராலும் அறிய முடியாது). அன்னை பராசக்தி.

அண்டத்திலுள்ளது பிண்டத்திலும் உள்ளது என்று சொல்வது போல அன்னை நம் உடம்புக்குள்ளே சித்தாகாசப் பெருவெளியாக இருப்பவள் (ஆக்ஞையில்) வேள்வித் தீயிலே தோன்றி, வேள்வி செய்வார் விரும்பும் பயன்களைத் தருபவள் அன்னையே என்றாலும், அவள் உள் நாக்கில் உச்சரிக்கப்படும் ஒலியில் பொருந்தி இருக்கிறாள் என்ற உண்மையைப் பலரும் அறியவில்லையே! (அண்டம் - ஆகாயம். பிண்டம் -உடம்பு. குண்டம் - ஓம குண்டம், குணம் - நன்மைகள். கண்டம் - கழுத்து உள் நாக்கு).

அன்னையின் தகைமைகளை முழுமையாக உலகோர் பலரும் அறியவில்லையே என்று திருமூலர் இப்பாடலில் தன் வருத்தத்தைத் தெரிவிக்கிறார். அன்னை நம் உடலிலேயே சித்தாகாசப் பெருவெளியாகவும், ஒலிக்கும் மந்திரமாகவும் உள்ளாள். நாம் வேறு எங்கும் தேடிப்போகவேண்டிய அவசியம் இல்லை என்பதே கருத்து சென்ற பாடலிலும் திருமூலர் அன்னையின் ஆற்றலை அறிய வேண்டும் என்று சொன்னார் அல்லவா!



## 103. அணுவுக்கும் அணுவானவள்

**ஆயும் அறிவுங் கடந்தணு ஆரணி**
**மாயம தாகி மதோமதி யாயிடுஞ்**
**சேய அரிவை சிவானந்த சுந்தரி**
**நேயம தாநெறி யாகிநின் றாளே. 1239**

ஆராய்ந்தறியும் அறிவுக்கும் எட்டாத, அணுவுக்குள் அணுவான நுண்ணணுவானவள் ஆதி பராசக்தி. அவள் மாயம் செய்யும் மந்தகாசக் களிப்பினைத் தருபவள். செந்நிறம் பொருந்திய பொற்பாவை. சிவனை விரும்பிச் சேர்ந்து மகிழும் சுந்தர வடிவினள். இவளே அன்புருவாய், அன்பு நெறியருள, அன்பர் உள்ளத்தே அமர்ந்திருப்பவளாவாள். (அணுஆரணி - நுண் அணுவானவள், மதோமதி - களிப்பினைத் தருபவள். சேய - சிவந்த. அரிவை - பெண் நேயம் - அன்பு).

சென்ற பாடலில் அன்னை சக்தி எங்கும் இருப்பதாகத் திருமூலர் சொன்னார். இங்கு அன்னை அணுவை விட நுண்ணியவள் என்று சொல்லி, அன்னை இல்லாத இடமேயில்லை என்பதைத் தெளிவாக்குகிறார். (துரும்பிலும் இருப்பாள், தூணிலும் இருப்பாள்)

அபிராமிபட்டர் அபிராமி அந்தாதியில் (16) ''அளியேன் அறிவளவிற்கு அளவானது அதிசயமே'' என்று வெகு அருமையாகக் கூறுகிறார்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் அன்னையை ''பரமாணு'' (808) என்று சொல்லும். மிகவும் ஸூக்ஷ்மமான அணுவாக இருப்பவள். கடோபநிஷத் (II&20) ''அணோரணீயான்'' என்கிறது. அதாவது அணுவை விட சிறிய அணு. அறிய முடியாத ரூபத்தை உடையவள் என்று பொருள்படும்.

## 104. அன்பர்களும் வணக்கத்திற்குரியவராவர்

**வந்தடி போற்றுவர் வானவர் தானவர்**
**இந்து முதலாக எண்டிசை யோர்களுங்**
**கொந்தணி யுங்கழலாளொடு கோனையும்**
**வந்தனை செய்யும் வழிநவில் வீரே 1242**

வானுலகத் தேவர்களும், அசுரர்களும் வித்தியாதரர்களும், இந்திரன் முதலான எண் திசைக்காவலர்களும் கூட வந்து, உங்களைப் பணிந்து வணங்குவர், பூமலர்க் கொத்தணிந்த கூந்தல் உடைய பராசக்தியையும், தேவர் தலைவனான பரம்பொருளையும் வழிபட்டு வணங்கித்துதிக்கும் வழிபடும் மந்திரத்தைச் சொல்லுங்கள். (தானவர் - அசுரர் வித்தியாதரர். இந்து இந்திரன் கொந்தணி - கொத்தாக அணியப்பட்டுள்ள எண்டிசையோர் - அஷ்டதிக்பாலர் இந்திரன், அக்கினி, இயமன், நிருதி வருணன், வாயு, குபேரன், ஈசானன்).

இப்பாடலில் திருமூலர் ஒரு அரிய கருத்தினைச் சொல்கிறார். சிவனையும் சக்தியையும் சேர்ந்து வழிபடும் அன்பர்களை அனைத்துலகத்தவர்களும் வந்து வணங்குவர். பக்தியின் உச்ச நிலையில் பக்தர்கள் பராசக்தியுடன் ஐக்கியமாகிவிடுவதால் அவர்களும் பரம்பொருளின் தன்மையை அடைந்து விடுவர். இதுதான் சாக்த நெறியில் கூறப்படும் தாதான்மியம் என்ற நிலை.

ஆதி சங்கரர் ஸௌந்தர்யலஹரியில் (22) ''பவானி த்வம் தாஸே மயி...'' என்ற ஸ்லோகத்தில் இக்கருத்தினை கவிநயத்துடன் சொல்கிறார். ''பவானித்வம்'' என்றால் நீயாகவே நான் ஆகின்றேன்'' என்று அன்னை நினைத்து தன்னுடைய கருணையினால் தனக்கும், தன் பக்தனுக்கும் வேற்றுமை இல்லாததாகிய ஸாயுஜ்ய பதவியை அவனுக்கு அளிக்கிறாள், அபிராமி பட்டர் அபிராமி அந்தாதியில் (14) ''வந்திப்பவர் உன்னை வானவர் தானவர் ஆனவர்கள்...''என்பார்.

## 105. குருவாய் வருபவள் அன்னையே

**இருவினை நேர் ஒப்பில் இன்னருட் சக்தி**
**குருஎன வந்து குணம்பல நீக்கித்**
**தரும் எனும் ஞானத்தால் தன் செயல் அற்றால்**
**திரிமலம் தீர்ந்து சிவ ன் அவனாமே. 1527**

நல்வினை, தீவினையின் பயன்களான புண்ணியம், பாவம் இரண்டும் சமமாக இருக்கின்ற நிலையில் உயிர்களுக்கு இன்னருள் புரியத் திருவுளம் கொண்ட அன்னை சக்தி ஞான குருவாக வந்து அந்த ஆன்மாக்கள் புலன் பொறி இச்சைகளால் அடையும் குணங்களை நீக்கி, உள்ளம் உறுதியாக ஞானத்தால், தான் என்னும் அகந்தையை அகலச் செய்து, ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களும் நீங்க அருள் புரிவாள். இந்நிலையில் அவள் சிவனாகத் திகழ்வாள். (குணம் - இயல்பு உயிர்களின் வினை வேட்கை. தன் செயல் - ஆணவம்)

சீவர்களின் மேல் கொண்ட கருணையால் அன்னை தானே குருவடிவாக வந்து தன் அன்பர்களின் ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களையும் அறவே அழித்து சிவகதி அருளுபவள் என்பதே இப்பாடலின் கருத்து.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் - அன்னையை தக்ஷிணாமூர்த்தி ரூபிணீ (725) என்று துதிக்கிறது. அதாவது தக்ஷிணாமூர்த்தியின் ரூபமாக இருப்பவள். ப்ரம்மா, விஷ்ணு இவர்களுக்கு உபதேசிக்கும் சிவனுடைய ரூபம் தக்ஷிணாமூர்த்தி எனப்படும். தெற்கு முகமாக அமர்ந்திருப்வர் என்பதால் தக்ஷிணாமூர்த்தி. மிக எளிய முறையில் அறிய கருத்தை உபதேசிக்கும் திறமை உள்ளதால் (தக்ஷிணா- திறமை) தக்ஷிணாமூர்த்தி எனப்படுவர். ‘‘குருவே சிவம் எனக்கூறினான் நந்தி...’’ என்று மற்றொரு பாடலில் (1581) திருமூலர் கூறுகிறார். சிவனும் சக்தியும் அபேதமல்லவா!

## 106. ஞான முத்திரையுடன் அன்னை

**சூழ்ந்தெழு சோதி சுடர்முடி பாதமாய்
ஆங்கணி முத்தம் அழகிய மேனியா
தாங்கிய கையவை தார்கிளி ஞானமாய்
ஏந்து கரங்கள் எடுத்தமா பாசமே. 1382**

ஒளி வீசித் திகழும் மணிமுடியும், திருவடிகளும் திருமேனி முழுதும் திகழும் முத்தும் மணியுமான அணிகலன்களும், அவளுடைய நான்கு திருக்கரங்களில் ஒன்றில் பளிங்கு (ஸ்படிக) மாலையும் மற்றதில் பச்சைக்கிளியும், இன்னொரு கையில் ஞான முத்திரையும், நான்காவதான கையில் திருவடி காட்டி அருளும் குறிப்பும் காட்டி விளங்கும் திருக்கோலம் அன்னை பராசக்தியினுடையது. (தாங்கிய கை அடியவர்களைக் காக்கும் அபயகரம். தார் - ஸ்படிகமாலை. மாபாசம் - அளவற்ற கருணை).

சென்ற பாடலிலும் அன்னையே இம்மண்ணுலகில் ''குருவாய்'' வருவதைப் பார்த்தோம். இங்கு சீவர்களுக்கு தகுந்த உபதேசம் செய்து ஞானத்தை அருளும் நாயகியாகக் காண்கிறாம். அதாவது நமக்கு அறிவைத் தரும் சரிபாதியாக, மாதங்கியாக, மீனாட்சியாகத் தோன்றுகிறாள் அன்னை.

அன்னையின் நான்காவது திருக்கரம் ''திருவடியை'' நோக்கியிருக்கிறது. அதாவது திருவடிதான் அனைத்தையும் தரவல்லது என்ற ஞானத்தை உணர்த்துகிறது. அன்னையின் திருவடியை தங்கள் சென்னியில் (தலைமேல்) தாங்கத் தானே அன்னையின் அன்பர்கள் அனைவரும் அல்லும் பகலும் அனவரதமும் துதிக்கிறார்கள், துடிக்கிறார்கள் அன்றோ! நாமும் நமது மனதை அன்னையின் திருவடியில் பதித்து முக்தியடைவோமாக!

## 107. அன்னையின் மூல மந்திரம்

**கண்ணுடை நாயகி தன்னரு ளாம்வழி**
**பண்ணுறு நாதம் பகையற நின்றிடில்**
**விண்ணமர் சோதி விளங்க ஹ்ரீங்கார**
**மண்ணுடை நாயகி மண்டல மாகுமே. 1384**

அருட் பார்வையாலேயே ஆருயிர்களுக்கு அன்பு செய்யும் முக்கண்ணுடைய முதல்வி பராசக்தியின் அருளைப் பெறுவதற்குரிய வழியான இசையோடு ஒலி செய்யும், நாதசக்தி வெளியே இருக்கும்; ''ஹ்ரீங்கார'' ஒலிக்குரிய அன்னை பராசக்தி அருளால் மதி மண்டலத்தில் உறையும் அருளாற்றலாக உள்ளத்துள் அமையப் பெறும். அக ஒளி அறிதல் போல, நாத தரிசனம் யோக முறையாம். (பண்உறு - இசையோடு கூடிய. பகை அற-தடையின்றி)

சக்தியின் மூல மந்திரம்- ''ஹரீம்'' முன்னும் திருமூலர் (பாடல் 1073) ''ரீங்காரத்துள்ளே இனிது இருந்தாளே.'' என்றார். இந்த மந்திரத்தின் சிறப்புத்தன்மை - இதன் நாதமே. தேன் சிந்தும் மலர்களைத் தன் கரிய கூந்தலில் அன்னை அணிந்திருக்கிறாள் அத்தேனை பருக வரும் வண்டுகள் ரீங்காரமிட்டுக்கொண்டே இருக்கின்றன. இதனால் ''அன்னையைச் சுற்றி எப்போதும் ரீங்கார ஒலி கேட்டுக் கொண்டே இருக்கும்''.

''ஹ்ரீம்'' என்னும் இம்மந்திரத்தை ஜபித்துக் கொண்டேயிருந்தால், உள்ளத்தில் ஜோதியாய் ஒளிர்வாள் அன்னை! வேறு எந்த மந்திரமும் தேவையில்லை என்பதே இப்பாடலின் உட்கருத்தாகும்.



## 108. பாலையாக என்முன் நின்றாள்

**கடந்தவள் பொன்முடி மாணிக்கத் தோடு**
**தொடர்ந்தணி முத்து பவளம் கச்சாகப்**
**படர்ந்தல்குல் பட்டாடை பாதச் சிலம்பு**
**மடந்தை சிறியவள் வந்து நின்றாளே. 1400**

எண்ணங்களைக் கடந்து எல்லை கடந்து நிற்கின்ற சக்தி பொன்னாலான மணி முடியும், மாணிக்கத்தோடும், முத்தும் பவளமும் வைத்திழைத்த மேலாடையும் உடலைச் சுற்றி அணிந்த பட்டாடையும், திருவடிகளில் சிலம்பும் சூடியவளாக சின்னஞ்சிறு பெண் போல் என் முன் வந்து நின்றாள். (தோடு-காதணி, அல்குல் மறைவிடம். சிலம்பு- காலில் அணிவது).

அன்னையை இப்பாடலில் திருமூலர் பாலா திரிபுர சுந்தரியாகக் காண்கிறார் ஸ்ரீவித்யா உபாசனையிலும் இது ஒரு சிறப்பு மிக்க அம்சமாகும். பாலா மந்திரம் அனைத்தையும் தரவல்ல அற்புதமான மந்திரம் ஆகும். இம் மந்திரம் கோடி முறை ஜபித்தால் மறுபிறவி இல்லை என்பது நிச்சயம். (இம்மந்திரத்தை குரு முலமாகவே தான் அறிந்து கொள்ள வேண்டும்)

அபயாம்பிகை பட்டரும் மயிலாடுதுறையில் பெரிய கோவிலில் வீற்றிருக்கும் மாயூரநாதனின் பிராண நாடியாக விளங்கும் அபயாம்பிகைத்தாயை பாலாவாகவே துதிக்கிறார் (அபயாம்பிகை சதகம்). பாலாம்பிகை (பாலாம்பிகை) சித்தர்கள் வணங்கும் கண் கண்ட தெய்வம். (முன்னும் பார்த்தோம்.)

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் 593. பாலஸ்தா - நெற்றியிலுள்ள ஆக்ஞா சக்கரத்தில், ''ஹ்ரீம்'' பீஜத்தில் உள்ள பிந்து ரூபமாக இருப்பவள். 965. பாலா - பாலா திரிபுரந்தரியாக, குமாரியாக இருப்பவள். (எப்போதும் ஒன்பது வயசுப்பெண்)

## 109. சித்திகள் அளித்து அருளினாள்

**நின்ற இச்சத்தி நிரந்தர மாகவே**
**கண்டிடு மேரு அணிமாதி தானாகிப்**
**பண்டைய ஆனின் பகட்டை யறுத்திட**
**ஒன்றிய தீபம் உணர்ந்தார்க்கு உண்டாமே. 1401**

சின்னஞ்சிறு பெண் போல என் முன்னே வந்து - நின்ற சக்தி நிலையாகவே என்னுள் கலந்திடப் புருவ நடுவில் (ஆக்ஞையில்) பொருந்தி அணிமா, மகிமா முதலான எட்டுவகைச் சித்திகளும் தாமாகவே என்னை வந்தடைய எனக்கு அருள் செய்தனள். தொடர்ந்து வரும் ஆணவ மலங்களை, அதன் பயனாக வினைத் துயர் விலகி ஓடச் செய்யும் வல்லமை, உள்ளத்துள்ளே அவளைக் கண்டு உணர்ந்தவர்களுக்கு உண்டாகும். (மேரு - புருவ நடு நெற்றி. அணிமாதி - அணிமா முதலான சித்திகள் பண்டைய - முன்னைய ஆணின் பகடு - ஆணவமலம்)

தேவியைத் துதிப்போர்க்கு அவர்கள் கேட்காமலேயே எல்லாவித நற்பயன்களும் ஏற்படும் என்று திருமூலர் (மற்ற அருளாளர்களைப் போல்) சொல்கிறார். அதாவது அன்னையை நாம் கேட்கவேண்டும் என்பதில்லை சேயின் மனதில் உள்ளதை அறிந்தவள் தாய் அல்லவா!

அணிமா சித்திகளும் முடிவில் முக்தியும் அருள்வாள் அன்னை. அஷ்ட மஹாசித்திகள் 1. அணிமா. 2. மகிமா 3.லகிமா 4.கரிமா 5. பராப்தி 6.ப்ராகாம்யம் 7. ஈசித்வம், 8.வசித்வம். இதைத் தவிர வேறு பல சித்திகளும் உண்டு.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் - 224 மஹாஸித்தி - மஹாசித்திரூபமானவள், தேஸ்வரீ - சித்தர்களுக்கு ஈஸ்வரி, 989-வாஞ்சிதார்த ப்ரதாயிணீ - கேட்காமலேயே கொடுப்பவள். இந்த ''சித்திகளை'' - ஆத்ம ஞானம் அடைவதற்கு உபயோகிப்பவர்கள் தான் ''சித்தர்கள்'' எனப்படுவர்.

## 110. எங்கும் நிறைந்த ஆதி சக்தி

**அமுதம தாக அழகிய மேனி**
**படிகம தாகப் பரந்தெழும் உள்ளே**
**குமுதம தாகக் குளிர்ந்தெழு முத்துக்**
**கெமுதம தாகிய கேடிலி தானே. 1408**

அமுதமே வடிவான அன்னையின் திருமேனி அழகிய உருவுடையது. அன்புடன் விரும்பித் தொழுபவர்கள் உள்ளத்துள்ளே வெண்பளிங்கு (படிகமணி) போல் விளங்கி அவள் அருள்வாள். நீலோற்பல மலர் மாலையும் குளிர்ச்சி தரும் முத்து மாலையும் பொருந்த அணிந்தவளான அன்னை பராசக்தி அழிவற்றவள். எங்கும் நிறைந்திருக்கும் ஆதிசக்தி ஆவாள். (படிகம் - பளிங்கு குமுதம் - நீலோற்பலம் செங்கழு நீர்ப்பூ. கெமுதமதாகிய - பொருந்தியதாக. கெழுமுதம்-இடைகுறைந்து கெமுதம் ஆனது)

அன்னை எங்கும் நிறைந்திருக்கிறாள். அவள் இல்லாத இடமே இல்லை. உள்ளும் இருப்பாள், வெளியும் இருப்பாள். அவள் அழிவற்றவள். அவருக்கு பிறப்பும் இல்லை. இறப்பும் இல்லை. அவள் என்றுமே நிலைத்து நிரந்தரமாக இருப்பவள், இதையல்லாம் திருமூலர் கருத்தில் கொண்டு ''கேடிலிதானே'' என்று அருமையாகக் கூறுகிறார்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாமமும் மேற் கூறியவற்றை பல திருநாமாக்களில் சொல்கிறது. 400 - வ்யாபினி எங்கும் வ்யாபித்திருப்பவள் 143. நிருபப்லவா - அழிவில்லாதவள் 180. நிரபயா - அழிவில்லாதவள். 136.நித்யா- எப்பொழுதும் இருப்பவள். 951. சாச்வதீ - எப்போதும் இருப்பவள்.

அன்னை எப்போதும் இருப்பவள். மனிதர்களாகிய நாம் தான் நடுவில் வந்து செல்பவர்கள். இவ்வாறு நடப்பதைத் தடுக்க அன்னையின் திருவடியை நாடுவதே சிறந்த வழியாகும். முக்தியை அளிப்பதும் அதுவே.

## 111. சிவந்த திருமேனியள்

**செய்ய திருமேனி செம்பட்டுடைதானும்**
**கையில் படை அங்குச பாசத்தோடு அபயம்**
**மெய்யில் அணிகலன் இரத்தின மாமேனி**
**துய்ய முடியும் அவயவத்தில் தோற்றமே. 1316**

தேவியின் திருமேனி சிவந்த நிறமுடையது. (முன்னும் சில பாடல்களில் பார்த்தோம்). அவள் உடுத்தியிருக்கும் ஆடையின் நிறமும் சிவப்பே. கைகளில் படை, அங்குசம் கயிறு, அபயகரம் கொண்டு விளங்கும். அத்தேவியின் அணிகலன்கள் மாணிக்க மணிகள் அவள் திருமுடி சூடியிருப்பதும் இரத்தினக் கிரீடமாகும்.

(படை - வாள் அங்குசம் - தோட்டி, பாசம் - கயிறு. அபயம் - அருளும் அபய முத்திரை, மெய் - உடம்பு).

அன்னையின் திருமேனியை அன்பர்கள் சிவந்த வண்ணமாகவே வர்ணிக்கிறார்கள். இதன் காரணம் கருணையின் நிறம் சிவப்பு (முன்னுப் பார்த்தோம்). அன்னை அணியும் உடை ஆபரணங்கள் எல்லாமே சிவந்த நிறமானவை. அபிராமிபட்டர் அபிராமி அந்தாதியில் (53) ‘‘சின்னஞ் சிறிய மருங்கினில் சாத்திய செய்யப்பட்டும்..’’ என்று சொல்வார். ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் 37. அருணாருண-கௌஸும்ப-வஸ்த்ர-பாஸ்வத் - கடீதடீ - சிவப்புப் பட்டாடையால் பிரகாசிக்கின்ற இடையையுடையவள் -8 ராகஸ்வரூப - பாசாட்யா - ஆசை வடிவான (இச்சா சக்தியாகிய) கயிற்றை இடது பின் கையில் உடையவள். (க்ரோதாகாராங்கு சோஜ்ஜ்வலா (தீமையைப் பொசுக்கும்) கோபமாகி, அங்குசம் (ஞான சக்தி) வலது பின் கையில் தரித்து பிரகாசிப்பவள். அதாவது அன்னை தன் திருக்கரங்களில் ஆயுதங்கள் தாங்கியிருப்பது அன்பர்களின் காம க்ரோத பாசங்களைப் போக்குவிப்பதற்கே.

## 112. மூவருக்கும் முதல்வி

**காணும் பலபல தெய்வங்கள் வெவ்வேறு**
**பூணும் பலபல பொன்போலத் தோற்றிடும்**
**பேணுஞ் சிவனும் பிரமனும் மாயனும்**
**காணுந் தலைவி நற்காரணி காணே. 1087**

காணப்படுகின்ற கடவுள்கள் அநேகம். இப்படிப் பலவாகத் தெய்வங்கள் இருப்பது தங்கம் ஒரே பொருளில் இருந்து, அவரவர் விருப்பத்திற்கு ஏற்பப் பூண்டு கொள்ளும் பலவகையான ஆபரணங்களைச் செய்து கொண்டதைப் போன்றதே ஆகும். தெய்வங்கள் பலவாக இருந்தாலும், அவையாவற்றிற்கும் பெருமையாகப் பேசப்படும் சிவன், பிரமன், திருமால் ஆகிய மூவருக்கும் கூட, அவர்கள் செயல் விளங்கிக் காணக் காரணமாக இருப்பவள் தேவி பராசக்தியே! (பூணும்- அணியும் பேணும்-பெருமைப்படுத்தப்படும் மாயன்-திருமால்)

நாம் காணும் தெய்வங்கள் பலவாக இருந்தாலும் அவையெல்லாம் ஆதிபராசக்தியின் தோற்றங்கள் என்பதே இப்பாடலின் கருத்தாகும். ''அனைத்துமாகி நின்றாள் அன்னை'' என்று சொல்வதின் தத்துவமும் இதுதான்! எல்லாவற்றிற்கும் முன்னதாக இருப்பவள் அன்னை ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் - 975. பூர்வஜா - எல்லாவற்றிற்கும் முன்பு உண்டானவள். தைத்திரீயோபநிஷத்து (4.10.6). ''அஹமஸ்மி ப்ரதமரஜ ருதஸ்ய'' என்று கூறுகிறது. இதன் பொருள்: ''அழகும் ஒழுங்குமே உருக்கொண்ட இவ்வுலகிற்கு முன்னுதித்தவளாக நானே உள்ளேன்''

அபிராமிபட்டரும் அபிராமி அந்தாதியில் (25) முதல் மூவருக்கும் அன்னே...'' (44)இவளே கடவுளர் யாவர்க்கும் மேலே இறைவியுமாம்.'' என்று கூறுகிறார்.

## 113. அன்னையின் திருவடி காண

**ஆரே திருவின் திருவடி காண்பார்கள்**
**நேரே நின்றுஓதி நினைய வல்லார்க்குக்**
**காரேய் குழலி கமல மலரன்ன**
**சீரேயுஞ் சேவடி சிந்தை வைத்தாளே. 1200**

பேரழகாகப் பேரின்பப் பேறாக விளங்கும் பராசக்தியின் திருவடி காணக்கூடியவர்கள் யார்? அப்பெருமாட்டியை நெற்றிக்கு நேரே, புருவ நடுவில் நிறுத்தி, உள்ளம் ஒன்றிப் பொருந்தத் தியானித்திருப்பவர்களுக்குக் கார்மேகம் போன்ற கருங் கூந்தலுடைய அன்னை தாமரை மலர் போன்ற தன் திருவடிகளை அவர்கள் உள்ளத்தில் பதிய வைத்து அவர்கள் மனம் பொருந்த அவள் மனம் வைத்தாள். (கார் ஏர் - கருமை நிறம் பொருந்திய சீர்ஏயும் - பெருமை பொருந்திய)

பல பாடல்களில் திருமூலர் அன்னையை -ஆக்ஞையில் நிறுத்தி, அதாவது புருவ நடுவில் உள்ளத்தில், விடாது தவம் செய்பவர்களுக்கே அன்னை அருள் புரிவாள் என்பதை வலியுறுத்துகிறார். அவ்வாறு செய்து காண்பித்தவர்கள் - அபிராமி பட்டர் (திருக்கடவூர்), அபயாம்பிகை பட்டர் (மயிலாடுதுறை) அவர்கள் வழியில் நாமும் சென்று முக்தியடைய முயல வேண்டும். அபயாம்பிகை பட்டர் அன்னையின் திருவடிகளை ''தவசரணி'' என்று போற்றிப் புகழ்வதும் காண்க. (அபயாம்பிகை சதகம் - பாடல்) அன்னையின் திருவடிகள் தான் தவத்திற்குரிய மூலமானதொரு பொருளாகும். திருவள்ளுவரும் (திருக்குறள்-10)

''பிறவிப் பெருங்கடல் நீந்துவார், நீந்தார்.
இறைவன் அடி சேராதார்''

பொருள்: இறைவன் திருவடியை எப்போதும் நினைப்பவர், பிறவியாகிய பெருங்கடலைக் கடந்து கரை சேர்வர். மற்றையோர் பிறந்தும் இறந்தும் துன்புறுவர்.

## 114. வானளாவிய கொடியானவள்

**பைந்தொடியாளும் பரமனிருந்திடத்**
**திண்கொடி யாகத் திகழ்திரு சோதியாம்**
**விண்கொடி யாகி விளங்கி வருதலாற்**
**பெண்கொடி யாக நடந்த துலகே. 1142**

பசுங்கொடி போன்ற பராசக்தியும் பரம்பொருளுடன் கூடி இருந்திட அந்த சிவசக்தி சொரூபம் வல்லமை தரும் சித்சக்தியாக சோதிப் பிழம்பாகத் திகழும். அவள் வான மண்டலம் அளாவி வரும் சக்தியாதலால், பூ மண்டலம் முழுதும். அப் பெண்கொடி அருளால் பொலிவு பெறுவதாகும். (திண்-வலிமை, விண்கொடி-வானமளாவி, மின்னல் கொடி என்றும் கூறுவர்)

அன்னையை அன்பர்கள் கொடியாக வர்ணிப்பர் - அவள் சாதாரண கொடியல்ல. அடியும், முடியும் காண முடியாத மின்னல் போன்றவள். அவள் சீவர்களின் மேல் கொண்ட கருணையால், சீவர்கள் கடைத்தேற, பூமியெங்கிலும் நிறைந்து நிற்கிறாள். அவள் அவ்வாறு இருப்பதால் தான் இவ்வுலகும் உழன்று கொண்டிருக்கிறது என்பதை திருமூலர் தெள்ளத் தெளிவாகக் கூறும் பாடலிது!

அபிராமிபட்டர் அபிராமி அந்தாதியில் (21) ‘‘பசும் பெண் கொடியே’’ என்று அன்னையைப் போற்றிப் புகழ்கிறார் ஆதி சங்கரரும் ஸௌந்தர்யலஹரியில் (21) - ‘‘தடில்லேகா-தன்வீம்’’ என்ற ஸ்லோகத்தில் அன்னையை - ‘‘மின்னல் கொடிபோல் சூக்ஷ்மமான தேஜாரூபம் உடையவளாகக் காண்கிறார். ஸ்ரீலலிதா ஸஹ்ரநாமம். 107. தடில்லதாஸமருசி - மின்னல் போல் பேரொளியுடன் தேவி விளங்குகிறாள்.



## 115. தேவி திரிபுரை

**நின்ற திரிபுரை நீளும் புராதனி**
**குன்றலில் மோகினி மாதிருக் குஞ்சிகை**
**நன்றறி கண்டிகை நாற்காற் கரீடணி**
**துன்றிய நற்சுத்த தாமரைச் சுத்தையே. 1051**

உலகத்து உயிர்களைக் காக்கத் திருவுளம் கொண்டு எழுந்தருளியிருக்கின்ற திரிபுரை அநாதி காலத்தவள், மிகவும் தொன்மையானவள், குன்றாத அழகுடைய கோலக் குமரி இவள். அழகிய கருங் கூந்தலை உடையவள் (ஸ்ரீலலிதா ஹைஸ்ர நாமம் - 185) நீலசிகுரா) - நன்றறியத் தக்க சிவச் சின்னமான சிவமணி (கண்டிகை) அணிந்தவள்.

நான்கு கால்களை உடைய யானையை வாகனமாக உடையவள். நெருக்கமான இதழ்களை உடைய தாமரை மலரில் வீற்றிருக்கும் இவளே சுத்த வித்தியா தேவியாவாள் (சுத்தை) புராதனி - தொன்மையானவள்.

''முன்னைப் பழம் பொருட்கும் பழம் பொருளே'' திருவெம்பாவை -9 திருமாணிக்கவாசகர்.

ஸ்ருஷ்டிக்கு முன்னாலேயே இருப்பவள். இவளிடமிருந்துதான் ஸ்ருஷ்டி ஆரம்பித்தது.

குன்றல் இல் - குறைவு இல்லாத



## 116. தாமரை மலரில் வீற்றிருப்பாள்

**புரிந்தருள் செய்கின்ற போகமா சத்தி**
**இருந்தருள் செய்கின்ற இன்பம் அறியார்**
**பொருந்தி யிருந்த புதல்வி பூவண்ணத்து**
**இருந்த இலக்கில் இனிதிருந் தாளே. 1184**

உயிர்களுக்கு உயிர்வாழ்க்கை என்னும் இன்ப நுகர்வினை எய்திடச் செய்யும் இச்சா சக்தியாகிய அன்னை, உயிர்களின் உடலில் பொருந்தி அவர்களுக்கு இன்ப வாழ்வு அருளுகின்றாள். இந்த உண்மையைப் பலர் அறிந்திருக்கவில்லை. இப்படி உயிர்களோடு பொருந்தி இருக்கிற பெருமாட்டி செந்தாமரைப் பூ நிறம் கொண்ட மேனியள் (அபிராமி பட்டரும் ‘மாதுளம் பூ நிறத்தாளை’ என்பர்.)

அவள் இருப்பதும் தாமரை மலர் ஆசனத்தில்! மனத்தாமரை எனவும் கொள்ளலாம். அபிராமி அந்தாதியில், -‘‘வருந்தாவகை என் மனத்தாமரையில்’’ என்று வருவது காண்க.

(ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் 278. பத்மாஸனா)



## 117. சக்தியே சகலமும்

**உலகில் எடுத்தது சத்தி முதலா**
**உலகில் எடுத்தது சத்தி வடிவாய்**
**உலகில் எடுத்தது சத்தி குணமாய்**
**உலகம் எடுத்த சதாசிவன் தானே. 1713**

உலகினைத் தோற்றுவிக்க எண்ணிய சிவப்பரம்பொருள் தன்னுடன் ஒரு கூறாக இடங்கொண்டிருக்கிற சத்தியின் துணையுடன் இவ்வுலகைப் படைத்தருளினான். சக்தியுடன் சேர்ந்து படைக்கப்பட்ட உலகமே சக்தி வடிவானது. சக்தியின் தன்மை கொண்டது. (வடிவம் - உருவம், குணம்-தன்மை அதாவது செயலாற்றல்)

## 118. திசைமுகமானவள் தேவி

**ஆகின்ற சத்தியின் உள்ளே கலைநிலை**
**ஆகின்ற சத்தியின் உள்ளே கதிர் எழ**
**ஆகின்ற சத்தியின் உள்ளே அமர்ந்தபின்**
**ஆகின்ற சத்தி உள் அத்திசை பத்தே. 1732**

அனைத்தையும் உண்டாக்கும் ஆற்றலாக (ஆகின்ற) சக்தியிடம் இருந்து கலைகள் எல்லாம் தோன்றும்.

சக்தியிடம் இருந்தே சூரிய, சந்திர ஒளிக் கிரணங்கள் தோன்றுகின்றன. (கதிர் எழ) இச்சக்தியோடு சிவன் சேருகிற போது (உள்ளே அமர்ந்த பின்), பத்து திசைகளிலும் பொருந்தி சக்தி ஒளி வடிவாய்த் திகழும்.

திசை பத்தாவது - கிழக்கு, மேற்கு தெற்கு வடக்கு, தென்கிழக்கு தென்மேற்கு, வடகிழக்கு வடமேற்கு, மேல், கீழ்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் 236 சதுஷ் ஷஷ்டிகலாமயீ 64 கலைகளின் வடிவமாக இருப்பவள். 611. கலாத்மிகா. கலைகளின் வடிவானவள்.

## 119.அன்னை முகம் ஐந்து

**சத்திதான் நிற்கின்ற ஐம்முகம் சாற்றிடில்**
**உத்தமம் வாமம் உரைத்திடும் சக்தி**
**பச்சிமம் பூருவம் தற்புருடன் உரை**
**தெற்கில் அகோரம் வடகிழக்கு ஈசனே 1741**

ஆருயிர்களுக்கு, அருளை பொழிய இருக்கின்ற அன்னை சக்தியின் ஐந்து முகங்களைப் பற்றி சொல்ல வேண்டுமானால் அன்னையின் வடதிசை நோக்கிய முகம் வாமதேவம், போற்றப்படும் (உரைத்திடும்) சத்தியோசதம் மேற்கு நோக்கிய முகமாகும். தற்புருடம் கிழக்குப் பார்த்ததாகும். புகழப்படும் (உரை) தெற்கு பார்த்த திருமுகம் அகோரம். வடகிழக்கு திசை நோக்கிய முகம் ஈசானமாகும்.

(பச்சிமம் - மேற்கு, பூருவம் - கிழக்கு)



## 120. எந்தையும் தாயும் இருந்த இடம்

**எந்தை பரமனும் என்னம்மை கூட்டமும்**
**முந்த உரைத்து முறைசொல்லின் ஞானமாம்**
**சந்தித்து இருந்த இடம்பெரும் கண்ணியை**
**உந்தியின் மேல்வைத்து உகந்து இருந்தானே. 1770**

எம் தந்தையாகிய பரமசிவனும் தாயாகிய பராசக்தியும், இருவரும் பிரிவின்றி இணைந்திருக்கிற சேர்க்கையும் பற்றி முதலில் சிந்தித்து, அதுபற்றி முறையாக சொல்ல வேண்டுமானால் இந்தச் சேர்க்கையே ஞானலிங்கம் என்று கூறவேண்டும்.

இப்படிச் சேர்ந்து சிவத்தோடு இருக்கும் பராசக்தியை, உந்திக்கு மேலான மணிபூரகத்தில் வைத்து விரும்பித் தியானித்திருந்தேன்.

(பெரும் கண்ணி - பெரிய கண்களை உடைய பராசக்தி. உந்தி - தொப்பூழ்)

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் - 101.மணிபூராந்த ருதிதா: மணிபூரக சக்ரத்தில் ஸர்வாபரண பூஷிதையாக அம்பாள் காட்சியளிக்கிறாள்.



## 121. சக்தி சிவன் விளையாட்டு

**சத்தி சிவன்தன் விளையாட்டுத் தாரணி**
**சத்தி சிவமும் ஆம் சிவன் சத்தியுமாகும்**
**சத்தி சிவம் அன்றித் தாபரம் வேறில்லை**
**சத்தி தான் என்றும் சமைந்து உரு ஆகுமே. 1772**

சக்தி சிவன் இருவரின் விளையாட்டுக் களம், விளையாட்டின் விளைவு இந்த பூமி, சக்தியே சிவம். சிவமே சத்தி இரண்டும் ஒன்றே. சக்தி சிவம் இன்றி உடம்பெடுத்த உயிர்கள் எதுவும் இல்லை.

சக்தி தான் என்றும் ஆன்மாக்களோடு பொருந்தி, அவைகளின் உய்வுக்கு அருள் உருவம் கொள்ளும்.

(தாரணி -உலகம், தாபரம் - உடல் உருவம். சமைதல் - அமைதல், சிவம் - அருவம், சக்தி - உருவம்).

சிவம் சக்தியோடு சேர்கிறபோது உருவாகச் சமைவது சக்தியே. சிவத்துக்கு உருவமே சக்தி என்றும் கூறுவர்.

ஆதிசங்கரர், ஸௌந்தர் லஹரியில் முதல் ஸ்லோகத்திலேயே சக்தியின்றி சிவன் இல்லை என்பர்.



## 122. அன்பர் உள்ளம் அன்னையின் கோவில்

**நாவுக்கு நாயகி நன்மணி பூணாரம்**
**பூவுக்கு நாயகி பொன்முடி ஆடையாம்**
**பாவுக்கு நாயகி பாலொத்த வண்ணத்தாள்**
**ஆவுக்கு நாயகி அங்கமர்ந் தாளே. 1387**

நாவுக்கு - ஒலிக்கு முதல் பொருளான ஆதிசக்தி அணி மணி பூண்டவள். தாமரைப் பூவிலிருக்கும் செல்வத்துக்கு நாயகியான அலைமகள், பொன்னாலான திருமுடி சூடியவள், பட்டாடை அணிந்தவள்.

பாட்டு மொழிக்கு நாயகியான கலைமகள் பால் போலும் வெண்ணிறம் கொண்டு விளங்குபவள்.

ஆன்மாக்களுக்கு - பசுவாகிய உயிர்களுக்குத் தலைவியான அன்னை பராசக்தியோ அன்பர் உள்ளமே கோவிலாகக் கொண்டு அங்கு அமர்ந்திருந்தாள்.

(நாவுக்கு நாயகி - வாக்கு தேவி - பா-பாட்டு பேச்சு மொழி ஆ - பசு, ஆவுக்கு - பசுவாகிய ஆன்மாக்களுக்கு)



## 123. கற்பகமாக கருணை பொழியும்

**ஆமே ஆதோமுக மேலே அமுதமாய்த்**
**தாமே உகாரந் தழைத்தெழும் சோமனும்**
**காமேல் வருகின்ற கற்பக மானது**
**பூமேல் வருகின்ற பொற்கொடி ஆனதே. 1412**

மூலாதாரத்தில் குண்டலினீ அதோமுகமாக - கீழ் நோக்கிய முகமாக இருக்கிறது. அது ‘உ’ காரத்துடன் சேர்ந்து மேல் முகமாக, இடகலையில் ஒளியாய் நின்று, உச்சித் தலையில் நிற்கிறது.

நினைத்ததை எல்லாம் தருகின்ற கற்பகமரம் போல அன்னையின் அருள் அங்கே நிலைபெற அவளே தாமரைப்பூவில் இருக்கின்ற மகா இலக்குமி போன்றவளாவாள். வேண்டியது எல்லாம் தர வல்லவள் அவள்.

(சோமன் - திங்கள், இடகலை கா- சோலை சகஸ்ர தளம். கற்பகம் - இது வானுலகத்து மரம் நினைத்ததை எல்லாம் தரும் என்பர். பொற்கொடி-இலக்குமி)

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம். 989. வாஞ்சிதார்த்த ப்ரதாயினீ: பக்தர்கள் கேட்டதை எல்லாம் அபரிமிதமாகக் கொடுப்பவள். (பக்தர்கள் கேட்கக் கூட வேண்டாம்)



## 124. ஆங்காரம் அடங்க அன்னையை வழிபடு

**பொற்கொடி யாளுடைப் பூசனை செய்திட**
**அக்கனி யாகிய ஆங்காரம் போயிடும்**
**மற்கட மாகிய மண்டலந் தன்னுளே**
**பிற்கொடி யாகிய பேதையைக் காணுமே. 1413**

பொன்கொடி போன்ற அன்னையைப் பூஜிக்க நெருப்பைப் போலப் பிறரைச் சுட்டெரிக்கும் ஆங்காரம் அடங்கிப் போகும். அந்நிலையில் பெருவெளியாகிய சித்தாகாசத்தினுள்ளே நெளியும் கொடி போன்ற பராசக்தியைக் காணலாகும்.

(அக்கினி - நெருப்பு மற்கடம் - பரவொளி, பிற் கொடி - பின்னிய கொடி. பேதை - பெண்) அதாவது அம்பாளை வழிபட வழிபட நம் மனத்தின் ஆங்காரம் மெள்ள அழியும்.

உண்டாக்குபவளும் அவளே. அழிப்பவளும் அவளே. இந்தக் கருத்தை ஆதிசங்கரரும் சொல்கிறார் (சௌந்தர்யலஹரி-4)

## 125. இறைவியின் திருவருள் இன்பம்

**கன்னித் துறைபடிந்து ஆடிய ஆடவர்**
**கன்னித் துறைபடிந்து ஆடும் கருத்திலர்**
**கன்னித் துறைபடிந்து ஆடும் கருத்துண்டேல்**
**பின்னைப் பிறவி பிறிதில்லை தானே. 1519**

பரானந்த மகாநந்த ஸ்திரானந்த பேரின்பத்தை அடைவதற்கு அன்னையின் அருளை வேண்டாமல் சிற்றின்பத்தில் உழலுபவர் (அறியாமையினால்) என்றும் முக்தியின்பம் அடையார். எனவே அவர்கள் பராசக்தியின் திருவடிகளைச் சார்ந்து அவள் அருளில் சிந்தனை வைப்பார்களானால், அவர்களுக்குப் பின் தொடரும் மறு பிறப்பு இல்லாது போகும். அதாவது அழியாத ஆனந்தத்தை எய்துவர் (மோட்சம்). இதுதானே தேவி உபாசகனின் குறிக்கோள்களாக இருக்க வேண்டும். (முடிவான நிலை)

## 126. தலைவி தயாபரி பராசக்தி

**தானே தலைவி எனநின்ற தற்பரை**
**தானே உயிர்வித்துத் தந்த பதினாலும்**
**வானோர் தலமும் மனமும்நற் புத்தியுந்**
**தானே சிவகதி தன்மையும் ஆமே. 1074**

தானே தலைவியாக இருக்கின்ற தயாபரி - பராசக்தி இவள், தானே பதினான்கு உலகங்களையும் உயிர்ப்படையச் செய்த திரிபுரை இவளே.

வானவர் உலகமும், அவர்கள் புத்தியும், சித்தமும், செயலும் எல்லாம் தானே ஆகிய சிவ கதி அருளிச் செய்பவளாகவும் திகழ்கின்றாள்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம்-294. புவனேச்வரீ: பதினான்கு புவனங்களுக்கும் ஈசுவரியாக இருப்பவள்.

அதலம், விதலம், ஸுதலம், தலாதலம், மஹாதலம், ரஸாதலம் பாதாளம் என்ற பூமிக்குக் கீழுள்ள ஏழு உலகங்கள்.

பூமி, அதற்கு மேலுள்ள புவர்லோகம், ஸுவர்கலோகம், மஹாலோகம், ஜனோலோகம், தபோலோகம், ஸத்யலோகம் என்ற ஆறு உலகங்கள், ஆக பதினான்கு உலகங்கள்.

இவைகளைத் தன் விருப்பப்படி இயக்குபவள். புவனம் என்ற சொல்லுக்கு பூமி, ஸ்வர்கம், ஜலம் என்ற பல பொருள்கள் உண்டு. இவை எல்லாவற்றிற்கும் தலைவி ஆனவள். அபிராமி பட்டரும், ''பூத்தவளே'' புவனம் பதினான்கையும் பூத்தவண்ணம் காத்தவளே என்பார்.



## 127. குருவின் மூலமாக

**மெல்லியல் ஆகிய மெய்ப்பொருள்டனைச்**
**சொல்லிய லாலே தொடர்ந்தங் கிருந்திடும்**
**பல்லியல் பாகப் பரந்தெழு நாட்பல**
**நல்லியல் பாலே நடந்திடுந் தானே...**

மெல்லியல் ஆகிய மென்மையானவளான அன்னையை, உண்மைப் பொருளாக இருப்பவளைக் குரு சொல்லிக் கொடுத்தபடி போற்றித் துதித்துத் தியானித்தபடி இருங்கள்.

இதனால் பல வகையான துயரங்கள், துன்பங்கள் சூழவருகின்ற வாழ்நாட்கள் எல்லாம் நன்மை தரும் நாட்களாக, இன்பூட்டும் இனிய நாட்களாக இருக்க வாழ்க்கை நலமுறை நடக்கும்.

(பல்லியல்-பலவகையான, நல்லியல்பு-நல்லபடியாக)

கருத்து: குருவருள் இன்றி திருவருள் இல்லை என்பதை திருமூலர் உறுதிப்படுத்துகிறார்.



## 128. பொருந்தா தொரு பொருள் இல்லை!

**இல்லடைந் தானுக்கும் இல்லாது ஒன்றில்லை**
**இல்லடைந்தானுக்கு இரப்பது தானில்லை**
**இல்லடைந் தானுக்கு இமையவர் தாமொவ்வார்**
**இல்லடைந் தானுக்கு இல்லாதில் லானையே...**

இல் அடைந்தானுக்கு - பரம்பொருளும் பராசக்தியும் தாமே விரும்பி வந்து தங்கும் இடமாகக் கொண்ட, அருள் உள்ளம் வாயக்கப் பெற்றவர்களுக்கு, இவ்வுலகில் இல்லாத, கிடைக்காத பொருள் எதுவுமே இல்லை. அவர்கள் எண்ணியதெல்லாம் அடைவர். நினைத்ததெல்லாம் பெறுவர்.

இறைவனுக்குத் தம் உள்ளத்தை இடமாகத் தந்த இவர்கள் பிறரிடம் சென்று தங்களுக்கு என்று எதையும் யாசித்துப் பெறுவதும் இல்லை. இவர்களுக்கு வானுலகத் தேவர்களும் ஈடாக மாட்டார்கள். இவர்களுக்கு இவ்வுலகில் இல்லாதது என்று எதுவும் இல்லை. எல்லாமே உள்ளதாய் இருக்கும்.

இதே கருத்தை அபிராமிபட்டர் அபிராமி அந்தாதியில் (௯0) ''வருந்தா வகை...'' என்ற பாடலில் சொல்லுகிறார்.



## 129. பிறப்பை அறுக்கும்

**பிறப்பை அறுக்கும் பெருந்தவம் நல்கும்**
**மறப்பை அறுக்கும் வழிபட வைக்கும்**
**குறப்பெண் குவிமுலை கோமளவல்லி**
**சிறப்பொடு பூசனை செய்யநின் றார்க்கே...1524**

பிறப்பை அறுக்கும்-பிறவித் துயரிலிருந்து விடுபடச் செய்யும். பெருந்தவம் நல்கும்-பெரிய தவப்பேறுகளை நன்மைகளைக் கொடுக்கும்.

அறிவை மறைக்கும் அஞ்ஞானமாகிய திரையை அறுத்தெறியும். வழிபடவைக்கும்-உலகம் இவளை வணங்கி வழிபடச் செய்யும் தெய்வ நிலையை அருளும்.

இவையெல்லாம், குறப்பெண் கோமளவல்லியைச் சிறப்பொடு பூசனை செய்ய நின்றார்க்கு - அவள் அந்த கோமளவல்லி குறமகள் அருளுவாள்.

(குறப்பெண்-குறவர் குலப்பெண், குறிஞ்சி நிலப்பெண், கலைமகள். குவிமுலை-இளமார்பு, கோமளவல்லி அழகிய கொடி போன்றவள். பூசனை-வழிபாடு)



## 130. அன்பு செய்வார்க்கு ஆணை துணையாவாள்

**இரவும் பகலும் இலாத இடத்தே**
**குரவம் செய்கின்ற குழலியை உன்னி**
**அரவம் செய்யாமல் அவளுடன் சேரப்**
**பரிவொன்றி வாழும் பராபரை தானே... (1528)**

இரவும், பகலும் இலாத இடம் - இரவும் பகலும் என்ற இரண்டும் இல்லாத இடம்-தியான நிலை. இங்கே இருந்தபடி, குரவம் செய்கின்ற குழலிடை உன்னி-மணம் வீசுகின்ற மலர்க் கூந்தலுடைய பராசக்தியைத் தியானித்து.

அரவம் செய்யாமல் அவளுடன் சேரப்-ஆரவாரமின்றி அவள் நினைவில் ஒன்றி இருந்தால் அவளும், இந்த ஆன்மாவிடம் பாசம், அன்பு கொண்டு அவனுள் பொருந்தி இருப்பாள்.

(இரவு பகல் இலாத இடம்-சகஸ்ரதளம். குரவம்-மனம். குழலி-கூந்தலுடையவள். உன்னி-தியானித்து அரவம்-ஒலி. பரிவு ஒன்றி-பாசம் கொண்டு. வாழும்-வாழ்வாள்)

ஒளவைப் பாட்டியார் விநாயகர் அகவலில் ‘இருள்வெளி இரண்டிற்கும் ஒன்று இடம் என்ன...’ என்பதை நோக்குக.



## 131. அன்னையே ஞானகுரு

**இருவினை நேர்ஒப்பில் இன்னருட் சத்தி**
**குரு என வந்து குணம்பல நீக்கித்**
**தரும்எனும் ஞானத்தால், தன்செயல் அற்றால்**
**திரிமலம் தீர்ந்து சிவன்அவ னாமே... (1527)**

நல்வினை, தீவினையின் பயன்களான புண்ணிய பாவம் இரண்டும் சமமாக இருக்கின்ற நிலையில், உயிர்களுக்கு இன்னருள் புரியத் திருவுளம் கொண்ட சக்தி, ஞான குருவாக வந்து, அந்த ஆன்மாக்கள் புலன் பொறி இச்சைகளால் அடையும் குணங்களை நீக்கி, உள்ளம் உறுதியாக ஞானத்தால், தான் என்னும் அகந்தையை அகலச் செய்து, ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களும் போக அருளுவாள்.

இந்நிலையில் அவள் 'சிவனாகத்' திகழ்வாள்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம்-725 தக்ஷிணாமூர்த்தி ரூபிணீ-தக்ஷிணா மூர்த்தியின் ரூபமாக இருப்பவள் என்கிறது.



## 132.ஆதியும், அந்தமும் ஆனவள் சக்தி

**ஆதிப்பிரான உலகு ஏழும் அளந்தவன்**
**ஓதக் கடலும் உயிர்களுமாய் நிற்கும்**
**பேதிப் பிலாமையின் நின்ற பராசக்தி**
**ஆதிக்கண் தெய்வமும் அந்தமும் ஆமே...1570**

ஆதியாகிய பரம்பொருள் சிவபெருமான் ஏழு உலகங்களிலும் கலந்து இருப்பவன். அலை ஒலிக்கும் கடல்களும் கடல் சூழ்ந்த உலகத்தில் உள்ள உயிர்களுடன் எல்லா உயிர்க்கும் உயிருமாய் இருப்பவன் இவனே.

இச்சிவப் பரம்பொருளோடு பிரியாது கலந்து நிற்கின்ற பராசக்தி, உலகத் தோற்றத்துக்கும், ஒழுக்கத்திற்கும் காரணமான தெய்வமாகவும் விளங்குகிறாள்.

(ஆதி-முதல். அளத்தல்-கடந்து நிற்றல். ஓதம்-அலை, பேதிப்பில்லாத-பிரிதல் இல்லாத. ஆதி - தோற்றம். அந்தம்-முடிவு)



## 133. தாதையாய் மாதைத் தாங்கும் தயாபரன்

**பேதை அவளுக்குப் பெண்மை அழகாகும்**
**தாதை இவளுக்குத் தாணவு மாய் நிற்கும்**
**மாதை இவளுக்கு மண்ணுந் திலகமாய்க்**
**கோதையர் சூழக்குவிந்திடங் காணுமே....**

அருட்குணம் உடைய அன்னைக்கு, ஆருயிர்களை எல்லாம் காத்தருளுகின்ற மென்மைக் குணமே பேரழகு உடையதாக விளங்கும்.

பரம்பொருளாகிய சிவபெருமானே இவளுக்குத் தந்தையுமாகித் தாங்கி நிற்பான்.

மாதரசி மனோன்மணி இவள் நெற்றித் திலகமாய் அலங்கரித்து நிற்பவர்கள், இவளைச் சூழ்ந்து காணப்படும் பரிவார தேவதைகளாய் உள்ள கன்னியர்களே.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம்-237. மஹாசதுஷ்ஷ்டி கோடி-யோகினீ-கண ஸேவிதா- கோடி யோகினீ கணங்களால் ஸேவிக்கப்பட்டவள்.

(தாதை-தந்தை, தானு-தூண். மாதை-மாது, பெண். மண்ணும்-அலங்கரிக்கும், திலகம்-பொட்டு, கன்னியர்-சக்திப் பெண்கள்.



## 134. சிவனருட் சோதி பராசக்தி

**சுத்தம் அசுத்தம் துரியங்கள் ஓர் எழும்**
**சத்தும் அசத்தம் தணந்த பராபரை**
**உத்த பராபரை உள் ஆம் பராபரை**
**அத்தன் அருட்சக்தியாய் எங்கும் ஆமே...1430**

சுத்தம்-மலம் நீங்கிய, பிறவிக்குப் பின்னுள்ள நிலை. அசுத்தம் - பிறவிக்கு முன்னுள்ள நிலை. துரியம்-எல்லாம் கடந்து நிற்கிற உயர்நிலை

ஓர் ஏழாவன: சுத்தத்தில் கனவு, நனவு என்ற இரண்டும், அசுத்தத்தில் நனவு, கனவு உறக்கம் என்ற மூன்றும், வேருறக்கும் உயிர்படங்கல் என்ற ஏழும், சத்தாகிய அழியாதிருக்கின்ற நிலை, அசத்தாகிய அழிந்து படும் நிலை இவற்றை எல்லாம் கடந்து நிற்கின்ற பராசக்தி; உத்த பராபரை உள் ஆம்பராபரை-ஆன்மாக்களுக்கு உற்ற துணையாகி, அவற்றை உள்ளிருந்து இயக்குபவளாயிருக்கிற பராசக்தி; அத்தன் அருட்சத்தியாய் எங்கும் ஆமே:-

சிவபெருமானின் திருவருள் சக்தியாகி எங்கும் நிறைந்து இருக்கிறாள்.

(சத்து-அழிவற்றது. அசத்து-அழியக்கூடியது. தணந்த-நீங்கிய. பராபரை-பராசக்தி உத்த-உய்த்த, உற்ற துணை, உள்ஆம் -உயிருள் இருக்கும் அத்தன்-சிவன்.)



## 135. ஓம் எனும் மார்க்கம்

**தானந்த மேலே தருஞ்சிகை தன்னுடன்**
**ஆனந்த மோகினி யாம்பொற றிருவொடு**
**மோனையில் வைத்து மெலழிதரு கூறது**
**ஆனவை ஓமெனும் அவ்வுயிர் மார்க்கமே** ????

தானந்த மேலே தருஞ்சிகை தன்னுடன் - உடம்பின் மேல் உச்சித் தலையில் இடம் பெற்றுள்ள சகஸ்ராரத்தில், ஆனந்தமோகினி அம் பொற்திருவொரு-ஆருயிர்க்கெல்லாம் பொன்னொளி சிந்தும் சிவத்துடன் கூடி, மவுனமாக உபதேசிப்பது, 'ஓம்' என்னும் பிரணவ மார்க்கம். உயிர்க்கு உறுதுணையான மார்க்கம்.

(மோனை-மவுனம், மொழி தருகூறு-விளங்குகின்ற தன்மை. மார்க்கம்-வழி)



## 136. ஆறங்க மந்திரம்

**நெஞ்சு சிரம்சிகை நீளகவசம் கண்அம்பு**
**வஞ்சம்இல் விந்து வளர்நிறம் பச்சையாம்**
**செஞ்சுறு செஞ்சுடர் சேகரி மின்னாகும்**
**செஞ்சுடர் போலும் தெசாயுதம் தானே...** ????

இருதயம் (நெஞ்சு), தலை (சிரம்), தலைமுடி (சிகை), உடல் கவசமான மேல் தோல், கண் அம்பு-இவை ஆன்மாவுக்கு வஞ்சனை இல்லாது அறிவு விளக்கம் தரும் சுத்த மாயை விந்து ஆகும். இதன் நிறம் பச்சையாகும்.

சிறந்து விளங்கும் சிவந்த ஒளிச்சுடர் போலும் தலை முடியுடைய அன்னை பராசக்தி, மின்னல் ஒளிபோலக் காட்சிதருவாள். அவள் திருக்கரங்கள் பத்திலும் ஏந்திய பத்து படைக்கலங்களும், சிவந்த சூரிய ஒளிக்கதிர்கள் போல ஒளி வீசித் திகழும் ஆறு அங்க மந்திரங்கள் கூறப்படுகின்றன. ''இருதயாய நம, சிரசே நம, சிகாய நம, தவசாய நம, நேத்திரப்யோ நம, அஸ்திராய நம'' என்று ஆறு அங்களையும் அவற்றில் தியானிக்க, சக்தி வெளிப்பட்டு அருளுவாள் என்பது உணர்த்தப்பட்டது.

(செஞ்சிறு-சிறந்ததாக அமைந்த, சேகரம்-தலை முடி. சேகரி-தலைமுடி உடையவள். தெசாயுதம் - ஒளி பொருந்திய படைக்கலம்)

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நமம்-386. ஷடங்க தேவதா யுக்தா:-ஆறு அங்கதேவதைகளுடன் கூடியவள். (ஹ்ருதயம், சிரஸ், சிகை, தோள்கள், கண்கள், அஸ்த்ரம்)



## 137. ‘அ’கரமும் ‘உ’கரமும் சிவனும் சக்தியும்

**ஆரும் அறியார் அகாரம் அவன் என்று**
**பாரும் உகாரம் பரந்திட்ட நாயகி**
**தாரம் இரண்டும் தரணி முழுதுமாய்**
**மாறி எழுந்திடும் ஓசையது ஆமே...**

‘அ’கரமே சிவப் பரம்பொருள் என்பதை எவரும் அறியமாட்டார்கள்.

உலகைத் தாங்கி நிற்கும் ‘உ’காரம் எங்கும் பரவி நிற்கிற பராசக்தி ஆகும்.

உலகம் முழுமையும் தாங்கி நிற்கும் ஆதார சக்தியாம் ‘ஓம்’எனும் பிரணவத்துக்குத் துணையானவை இந்த ‘அ’கரமும், ‘உ’கரமும். இவை உச்சிதலைமேல் எழ (மாறி எழுந்திடும்) ஒலி உண்டாகும்.

‘அ’கர ‘உ’கர, ‘ம’கரம் - ஓம் ஆகும்.

(பார்-உலகம். தாரம்-துணை. தரணி-உலகம்)



## 138. சிவம் வேறு சக்தி வேறல்ல

**வேண்டி நின்றே தொழுதேன் வினை போயற**
**ஆண்டொரு திங்களும் நாளும் அளக்கின்ற**
**காண் தகையானொடும் கன்னி உணரினும்**
**மூண்டகை(மாறினும் ஒன்றது ஆமே..... 1766**

நான் செய்த பாவ வினைகள் எல்லாம் போய் ஒழிய, நான் பரம்பொருளை வேண்டி நின்று தொழுது பணிந்தேன். ஆண்டுகளை, மாதங்களை, நாட்களை அளவு செய்கின்ற, கண்ணுக்கினயவனான பரம்பொருளை, மனோன்மணியாகிய சக்தியோடு சேர்ந்து தியானித்தாலும், இருவரையும் வேறு வேறாக மனம் கொண்டு தியானித்தாலும், இருவரும் ஒருவரே இரண்டும் சதாசிவ வணக்கமே.

இரண்டாலும் நீங்கள் பெறப்போகும் புண்ணியப் பலனும் ஒன்றே ஆகும்.

பரம்பொருளின் இருகண்கள் சூரியசந்திரர்கள். எனவே நாட்களின் தோற்றமும், முடிவு, திங்கள், ஆண்டு இவை அவன் அளப்பவை எனப்பட்டது.

(கான் தகை-காணத் தக்க பேரழகு, கன்னி-சக்தி உணர்தல்-தியானித்தல், மூண்டகை-இருவேறாக இருப்பது.

ஶ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் 999 சிவசக்தி ஐக்ய ரூபிணீ.



## 139. ஆதியும் பாதியும் ஆன தெய்வம்

**ஆதி பரம்தெய்வம் அண்டத்து நல்தெய்வம்**
**சோதி அடியார் தொடரும் பெருந்தெய்வம்**
**நீதி உள் மாதெய்வம்ஞநின்மலன் எம் இறை**
**பாதி உள் மண்ணும் பராசக்தி ஆமே...**

அனைத்திற்கும் முதலா (ஆதி) மேலான (பரம்) தெய்வம், அண்டங்கள் அனைத்துக்கும் ஏற்ற நல்ல தெய்வம். அடியார்களாகிய மெய்யன்பர்கள் சோதி வடிவாகத் தொடர்ந்து கண்டு வணங்கும் பெரிய தெய்வம்.

நீதிவடிவான சத்திய சொரூபமான பெருந்தெய்வம் அதுவே. புனிதமான எம்பரம்பொருள் இறைவன் ஆவான்.

இப்படிப்பட்ட எம் இறைவனின் பாதி உடலில் பொருந்தி நிற்பவள் பராசக்தி ஆவாள்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் - 861. காந்தார்த விக்ரஹா: தன் கணவனின் ஸரீரத்தில் பாதி ரூபத்தைக் கொண்டவள். (அர்த நாரீ ஸ்வரூபம்) ஸ்ரீ கண்டார்த்த-சரீரிணீ: பரமசிவனின் பாதி சரீரமானவள். (சோதி-ஒளிச்சுடர், மா-பெரிய. நின்மலன்-புனிதமானவன். மன்னும்-பொருந்திய)



## 140. சிவன் சக்தி சேர்க்கை

**கொழுந்தினைக் காணில் குவலயம் தோன்றும்**
**எழுந்திடம் காணில் இருக்கலும் ஆகும்**
**பரம்திடம் காணில் பார்ப்பதி மேலே**
**திரண்டுஎழக் கண்டவன் சிந்தை உளானே...(1769)**

சிவக் கொழுந்தாகிய சிவஞான இருக்கைக் காணுகிறபோது, உலகம் எல்லாம் அங்கு ஒன்றாகத் தோன்றும். உலகத்து உயிர்களோடு எல்லாம் பரம்பொருள் பொருந்தி இருப்பதால், அப்பரம் பொருளைக் காணுகிறபோது உலகமே காணும் என்றார்.

இப்பரம்பொருள் செயல்படக் காரணமாகிய சக்தியைக் கண்டால், இருவரையும் மனதில் இருத்தித் தியானிக்கும் நிலை கைகூடும்.

உலக உயிர்களை உய்விக்கும் மெய்பொருளே, பரம்பொருள் என்பதை உறுதியாக உணர்ந்தால், அம்மையை ஒரு பாகம் கொண்ட அய்யன் வெளிப்பட்டு அருளுவான். இப்படித்தோன்றும் சிவன், அன்பர் உள்ளம் ஆலயமாகக் கொண்டவன்.

(எழுதல்-இயங்குதல், பரம் -பரம்பொருள் திடம் - உறுதி பார்ப்பதி - அம்மை,சிந்தை-மனம்)



## 141.ஒளிக்கு ஒளியான ஒளிசக்தி

**ஆமது அங்கியும் ஆதியும் ஈசனும்**
**ஆமது மண்டல மாருத மாதியும்**
**ஏமது சீவன் சிகையங்கு இருண்டிடக்**
**கோமலர்க் கோதையுங் கோதண்ட மாகுமே...1223**

ஒளிக்கு ஒளிதரும் பேரொளிப் பிழம்பாக இருக்கிற பராசக்தியும், பரம்பொருளாகிய சிவபெருமானும், மகேசுவரன் இருக்கும் வான மண்டலமாகவும் காற்று முதலான பூதங்கள் நிலை கொள்ளும் ஆகாய மண்டலமாகவும் காவலான சீவனுக்குள்ளே சிகை மந்திரம் செயல்படா வகையில் நடுநாடியுள் அழகிய கூந்தலுடைய மகாசக்தி விளங்கத் தோன்றுவாள்.

(மாமது மண்டலம்-மகேசன் விளங்கும் மண்டலம். மாரும்-காற்று மண்டலம். ஏமம்-காவல். சிகை-அங்க மந்திரங்களில் ஒன்று. கோதண்டம் - நடுநாடி)



## 142. அம்பாளிடம் திருமூலர் சரணாகதி!

**போற்றியென் பேன்புவ னாபதி அம்மையென்**
**ஆற்றலுள் நிற்கும் அருந்தவப் பெண்பிள்ளை**
**சீற்றங் கடிந்த திருநுதற் சேயிழை**
**கூற்றந் துரக்கின்ற கோள் பைந்தொடியே. 1150**

உலகங்கள் அனைத்திலும் அருளாட்சி செய்கின்ற அன்னை சக்தியைப் போற்றி வணங்குகிறேன். என்னுடைய அருந்தவ வலிமைக்கும் ஆற்றலின் மேன்மைக்கும் ஆதார சுருதியாக விளங்குபவள் அன்னை. என் அக இருளை, ஆங்கார ஆணவத்தை, சினத்தை அகற்றி அருளியவள் அவள். கொல்லும் கூற்றத்தை விரட்டியடிக்கும் வல்லமை உடையவளும் அவளே ஆவாள் (சீற்றம் - சினம், ஆணவ அகங்காரம் எல்லாம் கூற்றம்-எமன். கோள்-வலிமை)

அன்னை சக்தி திருக்கடவூரில் தோன்றி பதினாறு வயசு சிறுவன் சிவபக்தன் மார்க்கண்டேயனை காப்பாற்றுவதற்காக யமனையும் தன் இடது திருக்காலால் எட்டி உதைத்தவள் அன்றோ! மரணத்தினின்றும் மானிடர்களைக் காப்பவள் அன்னை சக்திதான்.

ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாமத்தில் - 181. ம்ருத்யு மதனீ- பக்தர்களுக்கு மரண பயம் இல்லாமல் செய்பவள் 557 காலஹந்த்ரீ - காலனை அழிப்பவள். 552.ஸர்வம்ருத்யு நிவாரிணீ - எல்லாவித மரணங்களையும் தடுப்பவள். 749. ம்ருத்யு தாருகுடாரிகா -மரணம் என்ற மரத்தை வெட்டும் கோடாரியாக இருப்பவள்.

இம்மண்ணுலகில் பிறந்த அனைவருக்கும் மரணபயம் வருவது இயற்கை அருளாளர்களும் ‘‘அப்போதைக்கு இப்போதே சொல்லி வைத்தேன்’’ என்பார்கள். ஆனால் அன்னையின் அன்பர்களை யமன் நெருங்க முடியாது என்ற தைரியத்தை தருகிறார் திருமூலர்.

# ஸ்ரீ மஹா பெரியவா சாலீஸா



முத்திதரும் நகரேழில் முதலாய காஞ்சியிலே
சத்திசிவை காமாட்சி அருள்காம கோடியிலே
எத்திசையும் புகழ் கொண்ட குரு சந்த்ரசேகரரை
பத்தியுடன் யாம்பாட வரமருள் விநாயகரே.

1. ஜய ஜய சங்கர சந்த்ரசேகர
ஜய விஜயேந்த்ரர் வணங்கிடும் ஈசா

2. காலடி சங்கரர் காஞ்சியில மர்ந்த
வாலறிவன் பீடம் தன்னில மர்ந்து

3. அறுபத்து எட்டாம் குரு மணியாக
அருளாட்சி செய்த துறவின் சிகரமே

4. வேதவிழுப் பொருள் அத்வைத சார
போதஸ்வரூபரே புண்ணிய மூர்த்தி

5. மாதரசி மஹாலக்ஷ்மியுமவர்பதி
வேதியர் சுப்ரமண்யர்நற் தவத்தால்

6. விழுமிய புரமதில் ஜயவருடம் தன்னில்
எழில்மிகு வைசாக அனுஷத்துதித்தீர்

7. அருள்குரு இருவர் விரும்பிய படியே
சிறந்த கலவையில் பராபவ மாசியில்

8. துறவறம் கொண்டு அறமதைக்காக்க
உறுதியும் பூண்ட ஜகத்குரு நாதா

9. நலிந்த நால்வேதம் பொலிவுடன் வளர
அல்லும் பகலும் நடையாய் நடந்து

10. உயர்ந்த நான்மறை காத்திட கற்றிட
இயன்ற கொடையுடன் வடுவையும் இரந்தீர்

11. வேள்விகள் மல்கி மழைவளம் சிறக்க
நாளும் உழைத்த நற்குணக் கடலே

12. வாழ்ந்தது அறமும் வீழ்ந்தது கலியும்
சூழ்ந்தது பக்தி நிறைந்தது இன்பம்

13. பால்தரும் ஆவினம்தனைக் காக்க நாளும்
புல்லொடு கறிகாய் தோல்தனைக் கேட்டீர்

14. பசியெனும் பிணியும் அகல அனுதினம்
ஆசையுடன் பிடி அரிசி தரச்சொன்னீர்

15. இருமனம் இணையும் புனித பந்தமாம்
திருமணம் அதையும் எளிமையாய் செய்ய

16. மங்கலப் பொருளுடன் ஆசியும் தந்து
இங்கு வறியவர் வாட்டமழித்தீர்

17. வழியேதுமிலா இடிபாடிடையே
வழிபாடின்றி உறையும் இறைவர்க்கு

18. ஆலயம் எடுத்து குடமுழுக்காட்டி
நாளும் இறையருள் இருந்திடச் செய்தீர்

19. அர்ச்சகர் குறைகள் அகன்றுயர் வடைய
கச்சி மூதூர் அறக்கட்டளை அமைத்தீர்

20. துயர்தரு பிணியால் வருந்திடுவோர்க்கு
அயராதருட் பிரசாதமருளினீர்

21. உற்ற உறவிலா மரித்த மாந்தரை
பற்றுடன் முறையாய்நல் அடக்கம் செய்திட

22. நேசமுடன் வேள்வி செய்த நற்பலன்தரும்
பாசம் மிக்க புனிதப்பணி தந்தீர்

23. செந்தமிழில் கோதை மணி வாசகரும்
தந்த பாவையைப் பாலர்கள் பாட

24. பரிசுகள் தந்து பரவசம் கொண்ட
பரமனே பாரில் உமக்கிணை யுண்டோ

25. பாமர ஜனங்களும் பரகதி எய்திட
ராமநாம ஜப யக்ஞும் வளர்த்தீர்

26. பல்கலை வித்தகர் வியந்து கொண்டாட
கல்வி கேள்விகளில் கலைமகளானீர்

27. எம்மதமும் சம்மதமென இருந்த
உம்மையே அவரவர் தெய்வம் என்றே

28. கண்டனர் யாவரும் கொண்டனர் பக்தி
மாண்டது பேதம் மீண்டது அன்பு

29. அவனியில் மீண்டும் மறைவழி நிலைத்திட
அவதரித்தவரின் நீண்டநல் வாழ்வும்

30. ஆண்டொரு நூறு கண்டதன் நிறைவாய்
கனகாபிஷேகம் கொண்டருள் செய்தீர்

31. கற்றவர்க்கு உயர் கற்பகத் தருவாய்
மற்றும் கல்லார்க்கும் காம தேனுவாய்

32. அற்றவர்க்கும் சிந்தாமணியாய் ஒளிர்
அற்புதமே அன்பே அருள் நிதியே

33. எளிமை அன்பொடு பண்பின் உருவமாய்
கலியில் நடமாடும் தெய்வமே உம்மை

34. வாசமலர்களால் பூஜை தினம் செய்து
நேசமுடன் யாம் நினைவில் இருத்துவோம்

35. தெய்வத்தின் குரலில் செய்த உபதேசம்
வையம் வாழவே என்றும் ஒலித்திட

36. கண்கண்ட தெய்வம் காஞ்சிப் பெரியவரை
பண்கொண்டு பாடிப் புகழ்ந்திடுவோம் நாம்

37. குருவின் திருவடி மலரிணை அதனை
கருவில் திருவுடை அடியவர் என்றும்

38. கருத்தில் வைத்திட மாயை அகலுமே
இருவினை அகன்று பிறவி மாயுமே

39. கருணை மாக்கடல் காஞ்சி முனிவரின்
அருளில் வந்த இந்நாற்பது வரிகளை

40. ஒரு நினைவாக அனுதினம் ஓத
விரும்பிய வரமெலாம் வந்து குவியுமே.

## பயன் (பலஸ்ருதி)

நடமாடும் தெய்வமென பார்புகழும் குருமணிதன்
இடமாக வந்தமர்ந்த காமகோடி பீடமதை
திடமான பக்தியுடன் அனுதினமும் நாம்பாட
இடரானதும் விலகும் பொருளோடு அருள்கூடுமே.

ஜய ஜய சங்கர ஹர ஹர சங்கர
காஞ்சி சங்கரகாமகோடி சங்கர.

நன்றி எஸ். கணேச சர்மா

